Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன்-390

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர், மஹாவித்வான்

# SRI RAMANUJAN

Editor:

*Mahamahimopadhyaya*

P. B. ANNANGARACHARYA, Kanchipuram-631503.

வருடச் சந்தா 10

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி — ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1981 ரௌத்திரி ௵ மாசி ௴

# ஸ்ரீராமாநுஜன்-390



ஆசிரியர்:
ஸ்ரீ காஞ்சீ மஹாவித்வான் P. B. அண்ணங்கராசாரியர்

| | | |
|---|---|---|
| தொகுதி 33 | ரௌத்ரி௵ மாசி மீ<br>1981<br>பிப்ரவரி-மார்ச் மாதம் | பகுதி 10 |


## பத்ராதிப விஜ்ஞாபனம்

### ஸதாஸ்ஸ்மரணீய மஹநீயஸ்மரணம்



மேலேகண்ட மகுடத்துடன் சென்ற ஸ்ரீராமாநுஜனிதழில்— "என்னுடைய வாழ்நாளில் எனது அஸக்ருத் ஸ்மரணத்துக்கு இலக்கானவர்களும் வைகுண்டவாஸிகளுமான தொண்ணூறு மஹநீயர்களைப் பற்றிச் சில விவக்ஷித விசேஷங்களை யெழுதவேணு மென்று ஆசை தோன்றியுள்ள தென்று ப்ரஸ்தாவித்து அந்தத் தொண்ணூறு மஹநீயர்களின் திருநாமங்களை (1 to 90) குறிப்பிட்டிருந்தேன்; பல நூற்றுக் கணக்கான மஹநீயர்கள் என்னுடைய அஸக்ருத்ஸ்மரணத்தில் இருந்தாலும், நாளது பங்குனி மீ

விசாகத்தன்று (**25-3-81**) புதன்கிழமையன்று (பங்குனிமீ 12ஆம் தேதி) அடியேனுக்குத் தொண்ணூறு பிராயப்பூர்த்தியாவதனால் அதன் நினைவுக்குறுப்பாகத் தொண்ணூறு மஹநீயர்களை மட்டும் குறிப்பிட்டிருக்கிறேன். அவர்களில் ஒவ்வொருவரைப்பற்றியும் தெரிவிக்க வேண்டிய பெருமைகள் எண்ணிறந்திருந்தாலும் விரிவுக்கு அஞ்சி ஒருவாறு தெரிவிக்கின்றேன். முன்பு எழுதியுள்ள திருநாமங்களின் அடைவே. இது அடியேனுடைய ஆத்மானந்தத்திற்காகவேயன்றி வேறொன்றுக்காகவன்று. ... ... ... .... ❋

## 1 பிரதிவாதிபயங்கர அண்ணரங்காசாரியர் ஸ்வாமி

முதன் முதலாக அடியேனுடைய திருத்தகப்பனார் பெருமையை விஜ்ஞாபிக்கிறேன். ஸ்ரீ ரங்கநாதசர்மந் கொண்டவர், அண்ணரங்காசாரியரென்றே வழங்கும் திருநாமம். நாற்பத்து மூன்று ஸம்வத்ஸரமே இவ்விபூதியை அலங்கரித்தெழுந்தருளியிருந்தார். குரோதி ஸம்வத்ஸரம் பங்குனித் திங்களில் திருநாடலங்கரித்தமையால் இற்றைக்கு எழுபத்தாருண்டு நிரம்பி விட்டது. அடியேனுடைய பதினான்காவது பிராயம் முடிந்த ஏழா நாளில் பரமபதித்தபடி. அவரோடு நெருங்கிப் பழகினவர்களும் அவரிடத்தில் கல்வி பயின்றவர்களும் இற்றைக்குப் பதினைந்து ஸம்வத்ஸரங்களுக்கு முன்புவரையில் இருந்தார்கள். அப்படிப்பட்டவர்கள் இப்போது வாழ்வதாக ஒருவரும் நினைவுக்கு வரவில்லை. அவருடைய திருவுருவப்படமும் சேகரிக்கப்படவில்லை. அக்காலத்தில் தேவப்பெருமாள் ஸன்னிதி வீதியிலுள்ள வானமாமலை மடத்தில் ஸம்ஸ்க்ருத பாடசாலையொன்று பிரபலமாக நடந்து கொண்டிருந்தது. அதில் (திருத்தகப்பனார்) ஸாஹித்யத்திற்கும் திவ்யப்ரபந்தத்திற்கும் உபாத்யாயராக எழுந்தருளியிருந்தார். அப்பாடசாலையில் நூற்றைம்பது வித்யார்த்திகள் ஸம்ஸ்க்ருத பாடங்கள் பயின்று வந்தார்கள். காலை 10 மணிக்கும் மாலை 5 மணிக்கும் பாடசாலை விடும்போது மாடவீதிக்குத் திரும்பும் வித்யார்த்திகள் 75 பேர்களும் மேற்கே திரும்பும் வித்யார்த்திகள் 75 பேர்களும் காணப்படுவர்கள் ஸ்கூல் என்று சொல்லக்கூடிய பள்ளிக்கூடம் அப்போது சின்ன காஞ்சியிலோ பெரிய காஞ்சியிலோ ஒன்றுகூட ஏற்பட்டிருக்கவில்லை. அதனால்தான் அப்போது ஸம்ஸ்க்ருத வித்யாபாட ப்ரவசனங்கள் குறையற நடந்து வந்தன.

பிதாக்கள் புத்திரர்களுக்கு நன்மை புரிவது ஆச்சரியமன்று. ஆனால் என் தகப்பனார் எனக்கு நன்மைகள் புரிந்தது மிக மிக ஆச்சரியம் என்னவேணும். எனது ஐந்தாவது பிராயம்முதல் தாம் ஜீவித்திருந்த வரையில் ஒரு நிமிஷமும் அகல விடாமல் பதினான்கு பிராயத்திற்குள் காவியங்கள் நாடகங்கள் சம்புக்கள் அலங்கார நூல்களைத் தாமும் பிறரைக் கொண்டும் பயில்வித்ததை நினைக்குங்கால் "எனக்காரும் நிகரில்லையே" என்று கூசாமல் அநுஸந்திக்கும்படியுள்ளது. காவியங்களில் ரகுவம்சம் மாககாவியம் மேகஸந்தேசம் நைஷதம் முதலானவை. வேங்கடாத்வரியின் விச்வகுணதர்சம், வரதாப்யுதய மென்கிற ஹஸ்திகிரிசம்பூ. உத்தரசம்பூ, காளிதாஸ பவபூதி முராரிகளின் நாடகங்கள் காதம்பரி முதலானவை இவற்றைப் பயில்வித்தது இன்றைக்கும் அன்று போல் பரீக்ஷை கொடுக்கும்படியுள்ளதென்றால் இந்த பாக்கியம் என்னொருவனுக்கே ஏற்கும். திருத்தகப்பனார் திருமாளிகையிலேயே பாடசாலையை நடத்தும்படியாகத் திருமேனியில் அபாடவம் நேர்ந்திருந்த காலத்தில் காவ்ய பாடங்கள்முதல் உத்துங்க பாடங்கள்வரையில் நடைபெறும். எல்லாவற்றிலும் என்னை உடனிருக்கச்செய்து அருள் புரிந்தது அற்புதமே.

4, 5 லக்கங்கொண்ட ஸ்ரீமதுபயவே பட்டரை ஸ்ரீநிவாஸவரதாசாரியரும், ஆசாரிக்ருஷ்ணமாசாரீயரும் திருத்தகப்பனார்க்கு தக்ஷிண பாஹுக்களாயிருந்தவர்கள். இவர்களில் முதல்வர் பட்டரையென்னு மக்ரஹாரத்திலிருந்தும், இரண்டாமவர் திருப்புட்குழியிலிருந்தும் காஞ்சீபுரத்திற்கு வந்துசேர்ந்தவர்கள். இருவரும் சிறந்த யோக்யதை பெற்றவர்கள். பட்டரை ஸ்வாமி திருத்தகப்பனாரோடு கூடவேயிருந்து எனக்கு வித்யாபிவிருத்தி விஷயத்தில் மஹோபகாரம் செய்தவர். ஆசாரி க்ருஷ்ணமாசாரியரென்பவரும் வானமாமலை மடத்துப் பாடசாலையில் காவ்ய நாடகாதிகளுக்கு உபாத்யாயராயிருந்து மஹோபகாரம் செய்தருளினவர். "உடையவர் பஞ்சாசார்யபதாச்ரிதர்; நம் அண்ணா பஞ்சதசாசார்ய பதாச்ரிதன்" என்று அக்காலத்தில் வேடிக்கையாகச் சொல்லிப் போருவர்கள் ... ... ... ※

## 2 ஸ்ரீ அழகிய மணவாள ராமாநுஜ (ஷஷ்டி) ஜீயர்

தேவப் பெருமாளது கீழண்டை கோபுரவாசலில் விளங்கும் அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி மடத்தில் 1916ஆம் வருடத்திற்குமுன்பு நாற்பது ஸம்வத்ஸரகாலம் ஆஸ்தான மலங்கரித்து விளங்கின ஜகத்ப்ரஸித்த மடாதிபதி ஜீயர்ஸ்வாமி ஷஷ்டி ஜீயர் ஸ்வாமியென்று வழங்கப்பட்டு வந்தார். சதுஷ்ஷஷ்டி கலாவல்லப பரவஸ்து திருவம்சத்தில் அவதரித்ததனுல் ஷஷ்டியார் என்று குடும்பப்பெயராக வழங்குவது. அந்தரீதியில் ஷஷ்டி ஜீயர் ஸ்வாமியென்றே இந்த ஜீயர் ஸ்வாமி ப்ரஸித்தி பெற்றிருந்தார் இந்த ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் அடியேனுக்கு ஸாக்ஷாத்மாதாமஹராவர். இவர் பூர்வாச்ரமத்தில் ஷஷ்டி வரதாசாரியர் ஸ்வாமியென்று ப்ரஸித்தராய் தென்மொழியும் வடமொழியும் திகழ்ந்த நாவரராய் விசேஷித்துத் தமிழ்ப் புலவர் திரளில் ப்ரதம பரிகணிதராய் விளங்கி வந்தார். சடகோப நிலய பாடசாலையில் ஸ்ரீமத் திருப்புட்குழியப்பா ஸ்வாமி காலத்தில் தமிழிலக் ண விலக்கியங்களுக்கு உபாத்யாயபதவியை அலங்கரித்துவந்தார். கீர்த்திமூர்த்தியான ஸ்ரீ வை. மு, சடகோபராமாநுஜாசாரியர்ஸ்வாமியைப்பற்றிக் கேள்விப்படாதாரிலர். அந்த ஸ்வாமி ஸ்ரீஉவே. புன்னை சீமாச்சார் ஸ்வாமியென்பாருடைய மாணுக்கர். அந்த சீமாச்சார் ஸ்வாமி ப்ரக்ருதஜீயர் ஸ்வாமி ஸன்னிதியிலேயே (பூர்வாச்ரமத்தில்) மாணுக்கராக வாழ்ந்து தேர்ச்சி பெற்றுர்.

பூர்வாச்ரமத்தில் ஸ்வாமியிடத்தில் தமிழ் வாசிக்காத தென்கலையாரோ வடகலையாரோ காஞ்சியிலோ காஞ்சீப்ராந்தங்களிலோ கிடையரர். அக்காலத்தில் நன்னூல் முதலிய இலக்கண நூல்களும் கம்பராமாயணம் அஷ்டப்பிரபந்தம் முதலிய இலக்கிய நூல்களும் பெரும்பாலும் அச்சேருமலிருந்தன; சில அச்சேறியிருந்தும் துர்லபங்களாயிருந்தன. அவற்றை ஜீயர் ஸ்வாமி தமது திருக்கையாலெழுதிக் கொடுத்து அடியேனுக்குப் பாடம் செய்வித்தருளின பரமாநுக்ரஹத்தை அடியேன் நினையாத நாளில்லை. திருத்தகப்பனர் பரமபதித்தபிறகு ஏறக்குறைய பத்து ஸம்வத்ஸரங்கள் ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி எழுந்தருளியிருந்தார். ரஹஸ்ய வ்யாக்கியானங்களும் நாலாயிரதிவ்வியப்ரபந்த வ்யாக்கியானங்களும் வரியடைவே காலக்ஷேபம் ஸாதித்தருளியது ஜீயர் ஸ்வாமியே.

## 3 ஸ்ரீ ஜகத்குரு ஸ்வாமி

"ஸ்ரீமுககும்பஸ்வாதீஜாதமநந்தார்ய ஸூரிமஹமீடே, ஸ்ரீக்ருஷ்ண ஸூரிதநயம் வாதிபயங்கரகுலாப்தி சந்த்ரமஸம்'' என்கிற நித்யாநுஸந்தேய திருநக்ஷத்திரத் தனியனின்படி ஸ்ரீமுகஸம்வத்ஸரம் மாசி மீ ஸ்வாதீ நக்ஷத்திரத்தில் இந்த விபூதியில் வந்து தோன்றி அறுபத்திரண்டு ஸம்வத்ஸரம் வாழ்ந்தருளி ஸ்ரீ ஸ்வாமீ செய்தருளின அதிமாநுஷ க்ருத்யங்கள் அவாங்மனஸகோசரமென்று ஒரே வாசித்தையில் தலைக்கட்டத் தக்கது. ஆயினும் ஸ்வல்பமே விஜ்ஞாபிக்கிறேன். ஸ்ரீ காஞ்சியில் ஸன்னிதி வீதியில் வடவண்டை வாடையில் ஸ்ரீஸுதர்சனாழ்வானுடைய ரக்ஷைபெற்ற மிகப்பெரிய திருமாளிகை 'காதி அனந்தாசாரியர் திருமாளிகை' என்றும் 'காரணை யனந்தாசார் திருமாளிகை' என்றும் ப்ரஸித்தி பெற்றது. இந்த ஸ்வாமியின் முன்னோர்கள் காரணையென்னும் அக்ரஹாரத்தில் வாழ்ந்துவந்ததனால், ஏறக்குறைய நூற்றைம்பது வருஷங்களுக்கு முன்பு வாழ்ந்தவரும், முதன்முதலாக வடதேசங்களுக்கெழுந்தருளி சிஷ்யஸம்பத்தைப் பெற்றவரும், புஷ்கரக்ஷேத்ரத்தில் விக்ரஹப்ரதிஷ்டை பெற்றிருப்பவருமான ஸ்ரீமதுபயவே. பெரிய அனந்தாசார்ய ஸ்வாமிக்கு 'காரணை அனந்தாசாரியர்' என்கிற ப்ரஸித்தியிருந்துவந்தது. அந்த மஹாஸ்வாமியின் ஸ்தானத்தில் எழுந்தருளியிருந்த காதி ஸ்வாமி இளமையில் அடியேனுடைய திருத்தகப்பனாரிடம் சில வருஷங்கள் கல்வி பயின்று, திருப்பதியில் எழுந்தருளியிருந்த ஜகத்விக்யாத வித்வத்ஸார்வபௌமரும் தமக்கு ஸாக்ஷாத்மாதுலருமான ஸ்ரீமத் திருமலை அனந்தாண்பிள்ளை புரிசை ஸ்ரீரங்காசார்யஸ்வாமி திருவடிவாரத்தில் சென்று பத்தெட்டு ஸம்வத்ஸரங்கள் அங்கேயே குடிவாழ்ந்து ஸகல சாஸ்த்ரபாரங்கதராய் தீபாதுத்பந்ந ப்ரதீபமாய் விளங்கினர். அந்த காலத்தில் காஞ்சியில் அவருடைய நிர்வாஹங்களையெல்லாம் திருத்தகப்பனாரே முக்கியஸ்தராயிருந்து பார்த்துவந்தார். திருத்தகப்பனார் பரமபதித்தபோது ஸ்ரீ காதி ஸ்வாமி மார்வாடத்தில் சிஷ்ய ஸஞ்சாரமாக எழுந்தருளியிருந்ததனால் செய்தியறிந்து சிலநாளைக்கெல்லாம் காஞ்சீபுரி யெழுந்தருளி அடியேனை த்விதீய புத்ரனாக அபிமானித்தருளித் தமது திருமாளிகையிலேயே இருத்திப் பதினேழாவது பிராயம் வரையில் நியாய வியாகரணங்களை அதிகரிப்பித்தருளினார் ஸ்ரீ காதி

ஸ்வாமி. இடையிடையில் சிஷ்யஸஞ்சாரார்த்தமாக மாதக் கணக்கில் வடநாட்டுக்கு எழுந்தருளநேரும். அப்போதுகளில் அடியேனையும் விடாமல் உடனழைத்துச் சென்று நிர்விக்நமாக வித்யாப்யாஸத்தை நடத்திப்போருவர். சில ஸமயங்களில் தம் திருமாளிகைக்கு அருகே யெழுந்தருளியிருந்த வித்வான். இளங்காடு. ரங்காசாரியர் ஸ்வாமியிடம் வாதக்ரந்தங்கள் வாசிக்கும்படி நியமித்தருள்வர். திருத்தகப்பனார் எழுந்தருளியிருந்தபோதே (கூடஸ்த) அண்ணா ஸன்னிதியில் வேதாந்த வைஜயந்தீ என்கிற பாடசாலையை ஸ்தாபித்தருளி ஏறக்குறைய பத்து ஸம்வத்ஸரங்கள் அதன்மூலமாகப் பல உபாத்யாயர்களைக்கொண்டு வித்யாப்யாஸம் விசேஷமாகச்செய்வித்தருளினார். ஸுதர்சன அச்சுக்கூடம் நிறுவி அதன் மூலமாக அனேக சாஸ்த்ரக்ரந்தங்களையும் ஸம்ப்ரதாய க்ரந்தங்களையும் அச்சிடுவித்து மஞ்ஜுபாஷிணி யென்னும் ஸம்ஸ்க்ருத பத்ரிகையை வாரந்தோறும் நடத்திவந்தது முதலான வைபவம் வாசாமகோசரம், ... ... ... — ※

4.5. நான்காவது லக்கங்கொண்ட ஸ்ரீமதுபயவே பட்டரை ஸ்வாமியையும், ஐந்தாவது லக்கங்கொண்ட ஸ்ரீமதுபயவே. ஆசாரி க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியையும்பற்றி. (1) திருத்தகப்பனாரைப் பற்றின முதற்கட்டுரையில் சுருக்கமாக எழுதினேன். அடியேன் கற்ற கல்விகளுக்கு அவ்விருவரையும் அடிப்படையான பரமோபகாரகர்கள் என்னவேணும். அடியேனுடைய திருத்தகப்பனார்க்கு ஸாக்ஷாந்மாதுலரான ஸ்ரீமத் கிடாம்பி. கிருஷ்ணமாசார் — பட்டணத்துமாமா என்றே சொல்லப்பட்டு வந்தவர் எனது ஐந்தாவது பிராயம் முதலாக எனது க்ருஹத்திலேயே குடிவாழ்ந்து எனக்குத் தமிழ் க்ரந்தம் தெலுங்கு தேவநாகரி லிபிகளைப் பழக்குவித்ததும், சப்த மஞ்ஜரி, ஸ்ரீராமாயண ஸங்க்ரஹம், ஸமாஸகுஸுமாவளி, தாதுபாடம் — இவை வாசிக்கும் போதே வ்யுத்பத்தியுண்டாகும்படியாகச்செய்ததும் எண்பது வருஷமானாலும் என்மனத்தை விட்டு நீங்காதவை திருத்தகப்பனார் 25, 30 பிராயம்வரையிலாவது ஜீவித்திருக்கலாம், அந்த பாக்கியமில்லாமைக்கு அடிக்கடி வருந்துவதுண்டடியேன் .... .... — ※

## 6. தாமல் விஜயராகவாசாரியார்.

திருப்புட்குழி ஸமீபத்திலுள்ள தாமலென்னுமக்ரஹாரத்தில் தோன்றினவிவர் இளமையிலேயே ஸம்பூர்ணமாக வேதமோதி பூர்வா பரப்ரயோகங்களுங்கற்று ஜீவிகைக்காக காஞ்சீபுரிவந்து சேர்ந்தார் எனது பதினைந்தாவது பிராயத்தில். அப்போதே வேதமோத ஆசை யுண்டாயிற்றடியேனுக்கு. ஓதவுமாரம்பித்தேன். ஸஹாத்யாயிகள் வாய்க்காமையினாலே உபயுக்தாப்சங்களையோதி ஒரு காண்டத்தளவிலே இடையூறுபட்டு நின்றது. மேலே 12 லக்கங்கொண்ட ஸ்ரீ உ. வே. மாம்பள்ளம் ஸுதர்சநாசார்ய ஸ்வாமியின் வைபவத்தில் இதன் சேஷம் காண்பது.

## 7 ராமசந்த்ராசார் (மாத்வர்)

தேவப்பெருமாள் ஸன்னிதியில் வஸந்தோத்ஸவ பங்களாவில் அடியேனுடைய இளமையில் ப்ரபலமாக நடந்துவந்த சடகோபநிலய மென்னும் ஸம்ஸ்க்ருத பாடசாலையில் 10, 12 வருஷகாலம் நியாய ஸாஹித்யங்களுக்கு உபாத்யாயராயிருந்த மஹாபண்டிதர் இவர். நேத்ரபாடவம் அடியோடு கிடையாது. ஆயினும் ப்ரவசனத்தில் மஹா நிபுணர். இவரிடத்தில் நான்கு வருஷம் வித்யார்த்தியாயிருந்தேன்.

## 8. வித்யாதீசாசார் (மாத்வர்)

மேலே குறித்த ராமசந்த்ராசாருடைய ஸஹோதரர் இவர்; ஸாஹித்யத்தில் நல்ல புலி என்று சொல்லக்கூடியவர் அடியேனுடைய திருத்தகப்பனார் மிகமிக மதிக்கும் வித்வானிவர். இவர் நாடோறும் எனது க்ருஹத்திற்கு விஜயம்செய்து எனக்கு காவ்யநாடகாலங்கார பாடங்கள் சிந்தனை சொல்லிவைக்கும்படி திருத்தகப்பனார் ஏற்பாடு செய்திருந்தார் ஸ்ரீஜகத்குரு காதி ஸ்வாமி அண்ணா ஸன்னிதியில் ஸ்தாபித்திருந்த வேதாந்த வைஜயந்தீபாடசாலையில் இவர் பலவாண்டுகள் ப்ரதாந உபாத்யாயராயிருந்தவர். அரசாணிபாலைவேங்கடாத்வரியின் சம்பூக்ரந்தங்களெல்லாம் இவர்க்கு வாசோவிதேயமாணவை. அது ஆச்சரியமன்று; அவற்றையெல்லாம் எனக்கு வாசோ விதேய மாக்கினதுதான் மிக்க ஆச்சரியம். இதற்காக எனக்கு வாய்த்த உபாத்யாயர்கள் பதின்மர் என்றால் மிகையாகாது.

## 9. இளங்காடு ரங்காசாரியர் ஸ்வாமி

காஞ்சியில் திருப்புட்குழி ஸ்வாமியென்று ப்ரஸித்தராயெழுந் தருளியிருந்த மஹாஸ்வாமியின் திருக்குமாரரான ஸ்ரீமத். பட்டணு ஸ்வாமியின் அந்தேவாஸியான இந்த இளங்காட்டுஸ்வாமி பரமபதித்து 35 வருஷமேயாகிறது. இவர் நியாய சாஸ்த்ரத்தில் மஹா நிபுணராய் அதிகரண ஸாராவளியையும் தத்வமுக்தா கலாபத்தையும் கண்டஸ்த மாகக் கொண்டிருந்தார். ஸ்ரீமதுபயவே. காதி ஸ்வாமி வடநாட்டு ஸஞ்சாரமாக எழுந்தருளுங்காலங்களில் அடியேன் இந்த ஸ்வாமியிடத் திலே நியாயபாடம் வாசித்ததுண்டு. "சமதமகுணஸிந்துஸ் ஸாத்விகேஷ் வக்ரகண்ய:" என்பதற்கு மிகப் பொருத்தமானவர் இந்த ஸ்வாமி. நெடுங்காலம் காஞ்சியில் வாழ்ந்து கலா்வைஷம்யச்சண்டை, மடமுனித் ரயச்சண்டை முதலான எந்த விவாதத்திலும் த்ரிகரணத்தாலும் ஸம்பந் தப்படாமல் ஸர்வபூதஸுஹ்ருத்தாக விளங்கின பெருமை இந்த ஸ்வா மிக்கு அஸாதாரணமானது. தேவப்பெருமாளுடைய திருவீதிப் புறப் பாடுகளில் நியமேந அந்வயிப்பர். வேதபாராயண கோஷ்டிக்குப் பின் னுல் ஏகாந்தசீலராக எழுந்தருள்வர். தம்முடைய நியதமான காரியங் கள் தவிர வேறென்றில் கண்செலுத்தாமலும் செவி கொடாமலுமிருந்த பெருமைவாய்ந்த இந்த ஸ்வாமியின் இயல்பை அநுகரிக்கவல்லாராரும் இல்லை

... — ... — ✳

## 10. வேங்கடார்யன்

இவர் தேவப்பெருமாள் ஸன்னிதி ஸ்வயம்பாக மிராசுதாரர். அந்த கைங் கரியத்தை அறவே விட்டிட்டுத் தமிழும் ஆங்கிலமும் நன்கு கற்றிருந்தார். கீழண்டை மாட வீதியிலிருந்தவர். இவரிடத்தில் ஆங்கிலம் கற்கும்படி திருத் தகப்பனார் நியமித்திருந்தபடியால் சில மாதங்கள் கற்று அதில் ஸ்வல்பஞானம் பெற்றேன். அதை, காலத்திற்கேற்ற உபகாரமாக நினைக்கவேண்டியதாயிருக் கிறது. திருத்தகப்பனாருக்கு மருத்துவம் செய்யவந்திருந்த ஒருவரும் இதில் பங்கு கொண்டிருந்தார்.

... — — — x

## 11. ஸ்ரீமத் புதுப்பேர் வேங்கடாசார்ய ஸ்வாமி

இந்த ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் ஸாஹித்ய வியா கரணங்கள் பயின்று சிறந்த வித்வானாய் ஸ்ரீகாஞ்சியில் ஸ்ரீ ஜகத்குரு

ஸ்வாமி ஸ்தாபித்திருந்த வேதாந்த வைஜயந்தீ பாடசாலையில் இரண்டு மூன்றாண்டு அலங்காரக்ரந்தங்களுக்கும் வியாகரண சாஸ்த்ரத்துக்கும் ப்ரதாநோபாத்யாயராக எழுந்தருளியிருந்தார் இவரிடத்தில் குவலயா நந்த ரஸகங்காதராதிகளும் ஸித்தாந்தகௌமுதியும் அதிகரித்தேன். அந்த ஸ்வாமி சிலவாண்டுகள் கழித்து உத்தமாச்ரமியாய் அழகிய மணவாள ஜீயராயிருந்து கன்னடதேசத்தில் திருநாடலங்கரித்தார். ...

## 12. ஸ்ரீ மதுபயவே. மாம்பள்ளம் ஸுதர்சநாசார்யர்

இந்த மஹாபுருஷர் திருநாட்டுக்கெழுந்தருளி 35 ஸம்வத்ஸரமாகிறது. உலகத்தில் மிகவும் ப்ரஸித்தமாக வழங்கிவருகின்ற ×ந பூதோ ந பவிஷ்யதி× என்கிற வாக்கானது இந்த ஸ்வாமி ஒருவருக்கே தகும். இந்த உலகத்தில் மற்ற மஹான்கள் ஸம்பாதிக்கும் யோக்யதைகள் மற்றும் பலரிடத்தும் காணக்கூடியவையே யாகும் இந்த ஸ்வாமி ஸம்பாதித்திருந்த யோக்யதைகள் முக்காலத்திலும் அநிதரஸாதாரணமென்பதை விஜ்ஞாபிப்பதற்கும் அடியேன் அநர்ஹன். தென்னாடு முழுதிலும் இவருடைய யோக்யதைகள் நன்கு பரவியிருப்பதால் அடியேன் எடுத்துரைப்பது பிஷ்டபேஷணமே யாகும். வேதத்திலும், ஆழ்வாரருளிச் செயல்களிலும், ஆசார்ய திவ்ய ஸூக்திகளிலும், இதிஹாஸ புராணங்களிலும், காவ்ய நாடகாலங்காரங்களிலும் இந்த ஸ்வாமி பரிச்ரமப்பட்டு ஸம்பாதித்திருந்த யோக்யதை ஒருவர்க்கும் ஒரு புருஷாயுஸ்ஸில் ஸம்பாதிக்கக் கூடியவையல்ல என்பது ஸத்யம். இந்த ஸ்வாமி பெரும்பாலும் வித்யாக்ரஹணம் செய்தது ஸ்ரீ பெரும்பூதூரில். திவ்ய தேச வாஸத்தையே பரமபுருஷார்த்தமாகக்கொண்டு பலபல திவ்ய தேசங்களில் வாழ்ந்துகொண்டு நியதமு மத்தாணிச் சேவகம் புரிந்தார். நம்பெருமாள் ஸந்நிதியில் ஏழெட்டு ஸம்வத்ஸரம் எழுந்தருளியிருந்து வேதபாராயண கைங்கர்யம் நிர்வஹித்தருளினர். திருநின்றவூர், திருநீர்மலை திருவல்லிக்கேணி, ஆழ்வார் திருநகரி முதலான பல தலங்களில் மாதக்கணக்கிலும் வருஷக்கணக்கிலும் எழுந்தருளியிருந்து உபய வேத கோஷ்டிகளையும் நிர்வஹித்தருளினர். ஸ்ரீ காஞ்சியில் வேத வேதாந்தவைஜயந்தீ பாடசாலையைத் தொடங்கிவைத்தவர் இந்த ஸ்வாமியே. அடியேன் முதலான இருபது வித்யார்த்திகளுக்கு க்ரமாந்தம்

ஓதுவித்தவர். கீழே (6) லக்கங்கொண்ட தாமல் விஜயராகவாசாரியர் இந்த மாம்பள்ளம் ஸ்வாமியோடுகூட எனக்குச் செய்த உபகாரம் அபரிமிதம். பதக்ரமங்களைத்திடமாக ஓதுவித்தவர். ✳

## 13. ஸ்ரீ விரக்தி பாஷ்யகாராசார்ய ஸ்வாமி

திருப்புட்குழி ஸமீபத்திலுள்ள முஸர்பாக்கத்தில் ஸ்ரீமத் விரக்தி பாஷ்யகாரர் ஸ்வாமி யெழுந்தருளியிருந்தார் இவர் வியாகரண மீமாம்ஸைகளில் பரிபூர்ணபாண்டித்யம் பெற்றிருந்ததோடு உபய வேதாந்தங்களிலும் அகாதமான ஞானமுடையவர் அவரை 'நீறுபூத்த நெருப்பு' என்றே யாவரும் சொல்லுவர்கள் காஞ்சீபுரத்தில் ஸ்ரீ யதோக்தகாரி ஸன்னிதி ப்ராந்தத்திலுள்ள பல பெரியார்கள் ஸம்ப்ரதாய க்ரந்தங்களையெல்லாம் காலக்ஷேபம் செய்யவேணுமென்று ஆவல் கொண்டு இந்த மஹாஸ்வாமியைக் காஞ்சிக்கு எழுந்தருளப்பண்ணி அவ்விடத்திலேயே ஸ்திரவாஸியாகவைத்து யதோக்தகாரிஸன்னிதியில் பொய்கையாழ்வார் திருமண்டபத்தில் நித்யமும் காலைமாலைகளில் ஸம்ப்ரதாய க்ரந்த ப்ரவசநம் நடந்துவரும்படி ஏற்பாடு செய்திருந்தார்கள் அப்படி 15, 20 வருஷகாலம் நடந்தது. அக்காலத்தில் பிரபல உத்யோகஸ்தர்கள், வக்கீல்கள், வைதிகர்கள் பலரும் இந்த ஸ்வாமி பக்கலிலே உபயவேதாந்த ரஹஸ்யங்களை யெல்லாம் வரியடைவே ச்ரவணம் செய்துவந்தார்கள். அதுவொரு நல்லடிக்காலமென்னவேணும்.

## 14 ஜடப்ரோல் வாதிகேஸரி ராமாநுஜாசார்யர்

காஞ்சீ வாதிகேஸரி ஸ்வாமியின் மூத்த திருக்குமாரரானவிவர் மிக்க இளமையிலேயே அபரிமிதமான கல்விகளைக் கற்றார், உபயவேதங்களையும் தட்டுத் தடங்கலின்றி அவலீலையாகப் பரீக்ஷை கொடுக்கவல்லவராயிருந்தார். ஆசாரத்தில் வஸிஷ்டரையும் வென்றிருந்தார். முப்பத்தைந்து பிராயத்திற்குள் மறைந்து விட்டார். ✳

## 15 ஷஷ்டி திருவேங்கடாசார்ய ஸ்வாமி

இவர் அடியேனுடைய ஸாக்ஷாந் மாதுலர். அடிக்கடி அடியேன் உதாஹரிக்கும் ஸ்ரீமத்பரமஹம்ஸ அழகியமணவாள ராமாநுஜ ஷஷ்டி

ஜீயர் ஸ்வாமியின் பூர்வாச்ரம—ஔரஸகுமாரர் ஸ்ரீமத் குன்றபாக்கம் ஸ்வாமி ஸன்னிதியில் நியாயமீமாம்ஸைகளை அதிகரித்து ஸ்ரீபாஷ்யமும் ஸேவித்து அனந்தாழ்வார் வாதார்த்தங்களிலும் தேர்ச்சி பெற்றவர் ஜீயர்ஸ்வாமி ஸன்னிதியிலே ஸம்ப்ரதாய க்ரந்தங்களையெல்லாம் பலகால் ஸேவித்தவர். இவருடைய அப்ரதிம பாண்டித்யம் ப்ரகாசிக்க வழியில்லாமல் போயிற்று. ஏனென்னில், அடியேனுடைய திருத்தகப்பனார் இளமையில் திருநாடலங்கரித்தபடியால் எங்களுடைய பூர்விகமான சுரோத்ரியக்ராம பரிபாலன பாரத்தை அடியேனுடைய திருத்தாயார்க்குத் துணையாக இவர் ஏற்றுக்கொள்ள நேரிட்டது. க்ராமத்தில் பலவகையான வ்யவஹாரங்களும் தொடர்ந்ததனால் இவர் அஸ்தமிதாந்யபாவராய் அவற்றிலே வியாபரிக்க நேர்ந்தது. ப்ரவசனத்திற்கு வழியில்லாமல் போயிற்று ஓர் இருபத்தைந்து ஸம்வத்ஸரகாலம் இங்ஙனேயான காலக்ஷேபத்தினால் வித்யாவ்யாஸங்கம் அநவகாசபராஹதமயிற்று ஆயினும் சாஸ்த்ரங்களில் ஆழ்ந்த வ்யுத்பத்தியுடையவராயிருந்தார் .... ... ※

## 16 ஸ்ரீமத் தண்டரி பட்டப்பாதாதாசாரியார்

ஸ்ரீகாஞ்சீ ஸன்னிதி வீதியில் பதினாறுகால் மண்டபத்திற்கெதிர்த் திருமாளிகையில், தண்ட்ரி ஸ்ரீநிவாஸதாதாசார்ய ஸ்வாமியென்று திருநாமமுடையராய் பட்டப்பாஸ்வாமியென்றே வழங்கப்பட்டுவந்தவர் இந்த மஹா புருஷர். இவர் அடியேனுடைய திருத்தகப்பனார்க்கு ஸஹாத்யாயியாய் *பஹி: ப்ராண இவாபர:* என்னும்படியிருந்தவரென்று திருத்தகப்பனாரே ஸாதிக்கக் கேட்டிருந்தேன் அடியேனுடைய பதினைந்து பிராயத்திற்குள்ளாகவே இந்த ஸ்வாமி திருநாடலங்கரித்துவிட்டார். அப்போது இவர்க்கு நாற்பத்தைந்து திருநக்ஷத்ரங்கூட நிரம்பவில்லையென்று ஞாபகம் அடியேன் பாடசாலைக்குப்போகிறபோதும் திரும்புகிறபோதும் இந்த ஸ்வாமியிடத்தில் சற்றுப்போதாவது வார்த்தையாடாமலிருப்பதில்லை இது திருத்தகப்பனாருடைய நியமனத்தினாலுமாயிற்று திருப்புட்குழியப்பா ஸ்வாமியின் வித்யார்த்திகளில் இவர் தலைவராயிருந்து சதுச்சாஸ்த்ரங்களிலும் துல்யமான பாண்டித்யம் பெற்றிருந்தார். இந்த ஸ்வாமியும் எனக்கு ஜ்ஞாநாபிவ்ருத்தி செய்வித்த மஹோபகாரகர். .... .... .... ※

## 17 தனூறி வேங்கடவரததாதாசாரியர்

இவர் மேலேகுறித்த பட்டப்பா தாதாசாரியர் ஸ்வாமியின் அத்விதீய திருக்குமாரர். என்னோடுகூட 14 வயதுவரைக்கும் நாடகாந்தம் வாசித்து, பிறகு வேதாத்யயனம்பண்ணப் பிரிந்துவிட்டார் சில வருஷங்கள் தேவராஜஸ்வாமி தேவஸ்தானத்தில் தர்மகர்த்தாவாயிருந்தார், அடியேனுக்குப் பரம ஸ்நிக்தர், .... — — ※

## 18 குன்றபாக்கம் ஸ்ரீநிவாஸாசாரியர்

ஸ்ரீ காஞ்சீபுரியானது முற்காலத்தில் பிரபல வித்யா பீடமாக விளங்கிக் கொண்டிருந்ததென்பதை எந்நாட்டினரும் அறிவர். ஏறக்குறைய 40 வருஷங்களுக்குமுன் இம்மஹாநகரத்தில் த்ரிமதஸ்தர்களிலும் பிரபல வித்வான்கள் சதுச்சாஸ்த்ர பண்டிதர்களென்று புகழ்பெற்று விளங்கிக் கொண்டிருந்தார்கள். அன்னவர்களில் குன்றப்பாக்கம் ஸ்வாமியென்றே ப்ரஸித்திபெற்றிருந்த மஹாஸ்வாமி ஈடுமெடுப்புமில்லாத வித்வத் ஸார்வபௌமராக விளங்கியவர். 'குன்றபாக்கம் சீமாச்சார்ஸ்வாமி' யென்றே இவர்க்கு ப்ரஸித்தி. வட தேசங்களில் சிங்களாசார்ஸ்வாமி யென்று ப்ரஸித்தி. இந்த ஸ்வாமி சதுச்சாஸ்த்ரங்களிலும் வல்லவரெனினும் நியாய வேதாந்தங்களில் அஸாதாரணமான வைதுஷ்யம் பெற்றிருந்தார். நியாய சாஸ்த்ரத்தில் யார் எத்தனை கோடிகள் சொன்னாலும் இந்த ஸ்வாமியின் கோடியே மேம்பட்டு நிற்குமென்று ஸகல வித்வான்களும் ஏககண்டமாகச் சொல்லுவார்கள். ஸ்வாமியினுடைய திருமாளிகை சின்னகாஞ்சிபுரம் ஸன்னிதிவீதியிலுள்ளது. அந்த வீதியிலேயே ஸ்ரீ வானமாமலை மடத்தில் ஸ்வாமியினுடைய தலைமையில் ஸம்ஸ்க்ருத பாடசாலை 20 வருஷகாலம் வெகு சிறப்பாக நடந்துவந்தது அதில் நியாய வேதாந்த ப்ரவசனம் செய்து பலபேர்களை சாஸ்த்ராதிகாரிகளாக ஆக்கியருளினர். ... .... ※

*19. ஷஷ்டி ஸ்ரீநிவாஸவரதார்ய ஸ்வாமி, 20. புரிசை க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி, 21. ஈச்சம்பாடி ராமாநுஜாசார்ய ஸ்வாமி, 22. ஈச்சம்பாடி திருமலாசாரியர், 23. ஈச்சம்பாடி பெரிய வரதாசார்ய ஸ்வாமி, 25. விஞ்சிமூர் ஸ்ரீநிவாஸாசாரியர், இவ்வறுவரும் மேலே குறித்த (18) குன்றபாக்கம் ஸ்வாமி ஸன்னிதியில் சாஸ்த்ராப்யாஸம் செய்தவர்கள்.*

## 24. ஈச்சம்பாடி சடகோபாசாரியர்.

இவர் வ்யாகரணமும் உபய வேதங்களும் அதிகரித்தவர். தேவப் பெருமாள் ஸன்னிதி அத்யாபக கைங்கர்ய நிரதர்.

## 26. திருமலை விஞ்சிமூர் சிங்கராசாரியர்

கீழே 25 லக்கங்கொண்ட விஞ்சிமூர் ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமியின் அத்விதீய திருக்குமாரர். ஸ்ரீமதுபயவே. மாம்பள்ளம் ஸ்வாமியின் ப்ரதாநவித்யார்த்தி. அடியேனுடைய ஸாக்ஷாத் சிறிய தாயாரின் குமாரர். சிறந்த ஸம்ஸ்க்ருத வித்வான். உபயவேதத்திலும் கைதேர்ந்தவர். எமது வேதவேதாந்த வைஜயந்தீ பாடசாலையில் முப்பது வருஷங்களுக்கு மேலாக ஸாஹித்யத்துக்கும் உபய வேதங்களுக்கும் உபாத்யாயராயிருந்தவர். தேவப்பெருமாள் ஸன்னிதியில் இடைவிடாது அத்யாபக கைங்கரியம் நிர்வஹித்தவர். ஏழெட்டு வருஷங்களுக்கு முன்பு பரமபதித்தவர்.

## 27. ஸ்ரீமதுபயவே. விஞ்சிமூா பாஷ்யமையங்கார்ஸ்வாமி.

இவர் தென்னுசார்ய ஸம்ப்ரதாய ப்ரவீணர்; ஸம்ப்ரதாய ரக்ஷகர் என்னவேணும். இவர் காஞ்சீபுரிக்குத் திலகமாக எழுந்தருளி யிருந்தவர். இவருடைய அத்விதீய திருக்குமாரர் விஞ்சிமூர் நரஸிம்ஹாசாரியர் யசஸ்வியாக விளங்கி வருகிருர்.

## 28. ஸ்ரீபாஞ்சராத்ரம் ராஜம்பட்டர் ஸ்வாமி.

தேவப்பெருமாள் தேவஸ்தானத்து பட்டாசாரியர்களில் சிறந்து விளங்கினவர்; அடியேனுடைய க்ருஹத்திற்கு ஸந்நிஹிதராய் எழுந்தருளி யிருந்தவர். திருத் தகப்பனுருக்குப் பரமஸ்நிக்தராகையாலே அதிக காலம் அவரோடு கூடவே எழுந்தருளியிருப்பர். இவரிடம் நைஷத காவ்யமும் காதம்பரியும் சிந்தனை பண்ணினது ஞாபகமிருக்கிறது. இவருடைய ஸ்வீகார குமாரர் யசஸ்வியாய் ஸத்புத்ரரத்ந ஸமேதராய் விளங்கிவருகிருர். ... ... ... *

## 29. ஸ்ரீமத் தாயார் ஸன்னிதி வரதாசாரியர்ஸ்வாமி.

இவரும் திருத்தகப்பனுருக்குப் பரமஸ்நிக்தர். இவர் இளமையிலிருந்தே பஹுச்ருதர் என்று ப்ரஸித்தர். எல்லா க்ரந்தங்களிலும்

ப்ரவேசமுள்ளவர். இவரோடு சற்று வார்த்தையாடினாலும் அனேக சாஸ்த்ரார்த்தங்கள் எளிதாகத் தெரியவரும். திருக்குமாரர் கீர்த்திமானாய் விளங்கிவருகிறார்.

## 30. ஸ்ரீமத் உத்தரமேரூர் ராகவாசாரியர்.

காஞ்சீப்ராந்தத்தில் இவரொருவரே கனபாடியாக எழுந்தருளியிருந்தவர். அடியேனுக்கு வேதாத்யயனம் முடிவுபெறும் ஸமயத்தில் இவருடைய ஸ்நேஹம் பிரபலமாக ஏற்பட்டது. ஸ்நேஹம் என்னக் கூடாது; *ராமஸுக்ரீவயோரைக்யம்* என்றாப்போலே ஐக்யமென்ன வேணும். அடியேனெழுதிய வேதாந்த்யயநஸர்வஸ்வம் முதலிய க்ரந்தங்களுக்கு இந்த ஸ்வாமியே மூலகாரணமென்னலாம். மருமமறிந்து உகந்தவர். ... ... ... ... *

## 31. ஸ்ரீமதுபயவே. ஆஸூரி. மஹா ஸ்வாமி

### ஸ்ரீபெரும்பூதூர் ஸ்வாமிகள்

*அதீத மத்யாபித மார்ஜிதம் யச:* என்றதற்கு ப்ரதம லக்ஷ்யமாக எழுந்தருளியிருந்த இந்த மஹாஸ்வாமியின் பெருமைகளை ஸ்ரீ ராமாநுஜன் பலபர்யாயங்களில் பேசியிருக்கின்றது. *செலக்காண்கிற்பார் காணுமளவும் செல்லுங்கீர்த்தியாய்* என்னும்படி விளங்கின இந்த மஹாஸ்வாமியின் ஸ்மரணம் நித்யமுள்ளது.

## 32. ஆஸூரி (சின்ன) ராமாநுஜாசாரியர் ஸ்வாமி.

ஸ்ரீமதுபயவே. பெரிய ராமாநுஜாசார்ய ஸ்வாமியின் பரமக்ருபையினால் அபிவிருத்தியடைந்து சின்னஸ்வாமி யென்றே பேர்பெற்றிருந்த இந்த ஸ்வாமி இற்றைக்கும் எழுந்தருளியிருக்கத்தக்கவர். திருநாடலங்கரித்து ஏறக்குறைய முப்பது ஸம்வத்ஸரமாய்விட்டது. நியாய வேதாந்தங்களில் ஆழ்ந்த அவகாஹனமுடையராய்ச் சிறந்த வாக்மியாக விளங்கினவர். ஸ்ரீபெரும்பூதூர்க் கலாசாலையில் பலவாண்டுகள் நியாயோபாத்யாயராக விளங்கினவர்.

## 33. வேதவாத்யார் கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி.

ஸ்ரீபெரும்பூதூரில் முப்பத்தைந்து ஸம்வத்ஸரங்களுக்கு முன்பு வாழ்ந்த வித்வான்களில் சிறந்து விளங்கினவர் இந்த ஸ்வாமி. வேதவாத்யார் என்றே வ்யபதிஷ்டராயிருந்துவந்தார். வேதமும் வியாகரண சாஸ்த்ரமும் இந்த ஸ்வாமிக்கு ஸ்வாதீனமாயிருந்ததுபோல் கடல் சூழ்ந்த மண்ணுலகில் வேறு யார்க்கும் வசப்பட்டிருக்கவில்லையென்று அக்காலத்திலுள்ள ஸகல வைதிகர்களும் ஏகமுகமாகச் சொல்லுவர்கள். இவருடைய பரம்பரையே மிகச்சிறந்த வைதிக பரம்பரை. இவருடைய திருத்தகப்பனரிடத்தில் வேதமோதித் தேறினவர்கள் உபய கலையாரிலும் அடியேனுக்குத்தெரிந்து ஐம்பதறுபது ச்ரோத்ரியர்களிருந்தார்கள். அடியேனுடைய வேதோபாத்யாயரான ஸ்ரீமதுபயவே. மாம்பள்ளம் ஸுதர்சநாசார்யரும் அந்த மஹாஸ்வாமியிடத்திலேயேவேதமதிகரித்தவராதலால் அவரைப்பற்றி நாடோறும் கால்மணியாவது ப்ரஸ்தாவம் செய்யாமலிருக்கமாட்டார். அப்போது அவருடைய திருக்குமாரரான (ப்ரக்ருத) க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் வல்லமையையும் பேசிக்கொண்டிருப்பர். இவரிடத்தில் வேதமோதினவர்களும் வியாரண சாஸ்த்ரமதிகரித்தவர்களும் பலருண்டு. நெடுநாள் ஸ்ரீபெரும்பூதூர் ஸம்ஸ்க்ருத கலாசாலையில் உபாத்யாயராக விளங்கின ஸ்ரீ உ.வே. காந்தூர் ஸ்ரீசேஷாத்ரியாசாரியரும் இவருடைய அந்தேவாஸியே. இந்த க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூர் காலேஜில் பல ஆண்டுகள் வியாகரணப்ரவசனநிரதராக எழுந்தருளியிருந்தார். தமது திருமாளிகையில் வேதாத்யாபனம் தவருதவர். இந்த ஸ்வாமியின் தௌஹித்ரரே ஐந்தாறு வருஷங்களுக்கு மேலாக ஸ்ரீயதிராஜ ஜீயர் மடாதிபதியின் ஆஸ்தானத்தை அலங்கரித்தருளாநின்றார்.

## 34. ஸ்ரீமதுபயவே. மணவாள. ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி.

இந்த ஸ்வாமி எம்பெருமானார் தேவஸ்தானத்தில் சாத்துப்படி மிராசுதாரர். உபய வேதங்களிலும் வல்லவர். வேதபாராயண கோஷ்டிக்கு ப்ரதாந நிர்வாஹகர். பலர்க்கு வேதமோதுவித்தவர்.

(தொடரும்)

ஸ்ரீ:



பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்-
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ காஞ்சி ப்ரதிவாதி பயங்கரம்

# அண்ணங்கராசாரியர் ஸ்வாமியின்

ரௌத்ரி வருஷத்திய

## *மீன விசாகோத்ஸவ பத்திரிகை*

## ஸ்ரீஸ்வாமியின் தொண்ணூருவது திருநக்ஷத்திர பூர்த்தியை

முன்னிட்டு

ஸ்ரீ காஞ்சியில் ஸ்ரீ ஸ்வாமி திருமாளிகையில்

நாளது பங்குனிமீ 3உ (16—3—81) திங்கட்கிழமை

பங்குனிமீ 12உ (25-3-81) புதன்கிழமை வரை

வேதபாராயணம், திவ்யப்ரபந்தஸேவை;ரஹஸ்யாநுஸந்தாநம் ஸ்தோத்ரபாடம், வித்வான்களின் உபந்யாஸம் இவை நடைபெறும். ஆப்தர்கள் அனைவரும் கூடியிருந்து சிறப்பாக நடத்தி வைக்கும்படி பிரார்த்திக்கப்படுகிறார்கள்.

இங்ஙனம்,

காஞ்சீபுரம்,
1—3—81.

பிரதிவாதி பயங்கரம் செல்வமணி என்கிற
**ரங்கநாத தாஸன்.**

# எம்பெருமானரும் அருளிச்செயலும்

(முன்தொடர்ச்சி)

## கப்யாஸ ச்ருதியின் பொருள் விளக்கம்

**கப்யாஸம்** என்று ச்சாந்தோக்யோபநிஷத்திலுள்ள விலக்ஷண மான சொல்லுக்கு மூன்று வகையான வ்யுத்பத்திகளைக் கொண்டு மூன்று அர்த்தங்கள் அவதரித்தன. அவ்வர்த்த விசேஷங்களைக் காட்டுகின்ற ஸ்வாமி ஸ்ரீஸூக்தியாவது—*கம்பீராம்பஸ்ஸமுத்பூத-ஸம்ருஷ்ட நாள-ரவிகரவிகஸித புண்டரீக தலாமலாயதேக்ஷண:* என்பது. ஆழ்ந்த தண்ணீரில் வாழ்வதும், நாளமென்கிற தண்டோடு கூடியிருப்பதும், இரவியின் கதிர்களால் மலரப்பெற்றதுமான புண்டரீகத்தின் இதழ்போல் நீண்ட திருக்கண்களையுடையவனென்கை. கப்யாஸம் என்கிற இச்சிறு சொல்லால் இவ்வளவு அர்த்தங்கள் எங்ஙனே தோற்றுவிக்கப்படுகின்றனவென்று ஸந்தேஹம் எழக்கூடும்.

கம்பீராம்பஸ்ஸமுத்பூதமாயும், ஸம்ருஷ்டநாளமாயும், ரவிகர விகஸிதமாயுமிருக்கிற புண்டரீகத்தை எம்பெருமானுடைய திருக்கண்களுக்கு உவமையாகச் சொல்லுவது பொருத்தமென்று எம்பெருமானருடைய திருவுள்ளத்திலே தோன்றினது திவ்யப்பிரபந்தங்களில் அவர் ஆழ அவகாஹித்திருந்ததனலேயே. ஆழ்வார்கள் எம்பெருமானுடைய திருக்கண்ணழகைப் பற்றிப் பேசுமிடங்களில் மேலே காட்டிய மூன்று விசேஷங்களையும் வெகு அற்புதமாகப் பேசியுள்ளார்கள். ஆழ்வார்கள் எம்பெருமானுடைய திருக்கண்களுக்கு உவமை கூறுமிடங்களை ஊன்றி நோக்கினல் அபூர்வமான சில விசேஷங்கள் அறியப் பெறலாம். எம்பெருமானுடைய திருக்கண்களுக்குப் பெரும்பாலும் தாமரையை உவமை கூறுகிறார்களெனினும் அந்தத் தாமரைக்கு ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு விதமான விசேஷணமிடுகிறார்கள் ஆழ்வார்கள். அந்த விசேஷணங்களை மேல் நோக்காகப்பார்க்கும்போது விசேஷமொன்றையும் அறியகில்லோம். எதுகையின்பம் நோக்கியும் மோனையின்பம் நோக்கியும் செய்யுளைப் பூரிக்கவேண்டியும் விசேஷணங்களையிடுகிறார்கள் என்றும் சிலர் நினைத்தொழிகிறார்கள். எம்பெருமானர் எதையும் ஆழ்ந்து நோக்குபவராதலால் அந்த விசேஷணங்களைக்கொண்டு வேதாந்தப் பொருள்களை நிர்வஹிக்கும் பரிசு நெஞ்சால் நினைப்பரிது. அதை அடைவே விவரிக்கிறேன்.

[கம்பீராம்பஸ்ஸமுத்பூதபுண்டரீக]—ஜலஜமென்றும் அம்புஜமென்றும் அம்போஜமென்றும் நீரஜமென்றும் பேர் பெற்ற புண்டரீகமானது நீரில் நின்றுமுண்டாகாமல் மற்றென்றினின்று உண்டாக ப்ரஸக்தியில்லாமையாலே 'அம்பஸ்ஸமுத்பூத' என்றதன் கருத்து, நீரை விட்டுப் பிரியாமலிருக்கையைச் சொல்லுவதேயாம். "தாமரையை அலர்த்தக்கடவ ஆதித்யன்தானே நீரைப் பிரிந்தால் அத்தை யுலர்த்துமா போலே" என்கிற ஸ்ரீ வசனபூஷண ஸ்ரீ ஸூக்தியும், "கமலம் ஜலாத பேதம் சோஷயதி ரவிர் ந தோஷயதி" என்கிற ப்ரமாணமும் இங்கே அநுஸந்தேயம். நீரைவிட்டுப் பிரியாமலிருக்கிற தாமரை போன்ற திருக்கண்களையுடையவன் என்றதாயிற்று. "நீரார் கமலம் போல் செங்கண்மாலென்றொருவன்" என்கிற சிறிய திருமடற் பாசுரத்திலும், "அழறலர் தாமரைக்கண்ணன" (58) என்ற திருவிருத்தப் பாசுரத்திலும் ஆழ்வார்கள் திருவுள்ளம் பற்றிய அர்த்தமென்றே இஃது எம்பெருமானரால் ஆதரிக்கப்பட்டது. "நீரார் கமலம் போல்" என்ற விடத்தில் (நீரார்) என்ற விசேஷணம் எதுகையின்பத்திற்காக மாத்திரம் இடப்பட்டதன்று. "அழறலர் தாமரைக்கண்ணன்" என்றவிடத்து நம்பிள்ளையீட்டில் *கப்யாஸச்ருதி ஸ்பஷ்டமாகவே உதாஹரிக்கப்பட்டுள்ளது. அவ்விடத்து ஸ்ரீஸூக்தி வருமாறு—"[அழறலர் தாமரைக்கண்ணன்] அழற்றிலே நின்றலர்ந்த தாமரைப்பூப்போலேயிருந்துள்ள திருக்கண்களையுடையவன். *யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ* என்னக்கடவதிறே." இங்கு வாதிகேஸரியின் ஸ்வாபதேசவுரை வருமாறு—"அழறு என்று அளறு; நீரிலும் சேற்றிலும் நின்று அலர்ந்து செவ்வி மாறாத தாமரை போன்ற கண்ணையுடையவனென்றபடி". என்பதாம்.

ஆக, 'நீரார் கமலம்போல் செங்கண் மாலென்றொருவன்" என்ற சிறிய திருமடற் பாசுரத்தையும், "அழறலர் தாமரைக்கண்ணன்" என்ற திருவிருத்தப் பாசுரத்தையும் 'தண்பெருநீர்த் தடந் தாமரை மலர்ந்தாலொக்குங் கண் பெருங் கண்ணன்" என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தையும் திருவுள்ளம்பற்றியே 'கம்பீராம்பஸ் ஸமுத்பூத' என்ற விசேஷணத்தை ஸ்வாமி, யிட்டருளினரென்றது பொருத்தமாக முடிந்தது.

[ஸம்ம்ருஷ்ட நாள புண்டரீக] நீரை விட்டுப் பிரிந்த தாமரைக்கு சோபையில்லாததுபோலவே நாளத்தை விட்டு நீங்கின தாமரைக்கும் சோபையில்லாமையாலே தாமரைக்கு நாளத்திலிருப்பும் அவச்யவக்தவ்யமாயிற்று. இதுவும் ஆழ்வாரருளிச் செயலிலுள்ளது. திருவிருத்தத்

தில் "வன்காற்றறைய" என்கிற பாட்டிலே "எம்பிரான தடங்கண்கள்— மென்கால் கமலத் தடம் போல் பொலிந்தன" என்றருளிச் செய்யப்பட்டிருக்கின்றது. கமலத்திற்கு இடப்பட்டிருக்கிற 'மென்கால்' என்னும் விசேஷணத்திற்கு 'மெல்லிய நாளத்திலேயிருக்கின்ற' என்பது பொருள். (நாளமாவது தண்டு). கமலத்திற்கு அது கால் போன்றிருத்தலால் (கால்) என்னுஞ் சொல்லால் குறிக்கப்பட்டது. நாளமென்கிற பொருளையே பூருவர்களும் உரைசெய்துள்ளார்கள். ஆக இந்த திவ்ய ஸூக்திக்குச் சேர (ஸம்ருஷ்டநாள) என்றருளிச் செய்யப்பட்டது.

[ரவிகரவிகஸித புண்டரீக] தாமரை நீரிலிருந்தாலும் நாளத்திலிருந்தாலும் ஸூர்ய கிரணங்களால் அலர்த்தப்பட்ட நிலையில்தான் எம்பெருமானுடைய திருக்கண்களுக்கு ஒப்பாகுமாதலால் இந்த விசேஷணமும் ஆவச்யகமாயிற்று. இதுவும் ஆழ்வாரருளிச் செயலிலுள்ளது. திருவாய்மொழியில் (5 4–9) "செஞ்சுடர்த் தாமரைக் கண் செல்வன்" என்றுள்ள பாசுரம் இங்கே கொள்ளக்கடவது. இவ்விடத்து ஈட்டிலும் கப்யாஸ ச்ருதியை உதாஹரித்தருளியுள்ளார். இதில் (செஞ்சுடர்த் தாமரை) என்பதற்கு செவ்விய சுடரையுடைய தாமரை என்று பொருளாகிறது. அச்செவ்விய சுடர் அதற்கு எங்ஙனம் வந்ததென்னில், அதற்கு முன்னடியில் "அஞ்சுடரவெய்யோன்" என்று ஸூர்யனை ப்ரஸ்தாவித்திருக்கையாலே தததீநமென்று காட்டப்படுகிறது. ஆக ஸூர்ய ப்ரகாசமடியாக வந்த செவ்வியசுடரையுடைய தாமரைப் பூப்போன்ற திருக்கண்களையுடையவன் என்றதாயிற்று. இந்த ஸ்ரீஸூக்தியைத் திருவுள்ளம்பற்றியே 'ரவிகரவிகஸித புண்டரீக' என்றருளிச் செய்தது. "செந்தண் கமலக்கண்............சிவந்தவாயோர் கருநாயிறு அந்தமில்லாக் கதிர் பரப்பி அலர்ந்த தொக்குமம்மானே" என்கிற திருவாய்மொழிப் பாசுரமும் இங்கு யோஜிக்க வுரியது. "செங்கமலம் அந்தரஞ்சேர் வெங்கதிரோற் கல்லால் அலராவால்" என்கிற பெருமாள் திருமொழிப் பாசுரமும் இங்கு நினைக்கத்தக்கது. ஆனல் அப்பாசுரத்தில் திருக்கண் ப்ரஸ்தாவ மில்லாமையுணர்க.

## புண்டரீகதளாமலாயதேக்ஷண தத்வம்

"கப்யாஸம் புண்டரீகமேவ மக்ஷிணீ" என்கிற உபநிஷத்வாக்யத்திற்கு விவரணமாக ஸ்வாமியருளிச்செய்த *கம்பீராம்பஸ் ஸமுத்பூதேத்

யாதி திவ்யஸூக்தியில் "புண்டரீகதளாமலாயதேக்ஷண:" என்றிருப்பது ப்ரஸித்தம். மூல ச்ருதியில் "புண்டரீகமேவம் அக்ஷிணீ" என்றிருக்கிறதேயொழிய வேறில்லை; உள்ள மூலத்திற்குச் சேர "புண்டரீகேக்ஷண:" என்றிவ்வளவே அருளிச்செய்திருக்கவேண்டும்; அதிகப்படியாக மூன்று பதங்களைச் சேர்த்திருக்கிறார். (1) தள, (2) அமல, (3) ஆயத என்னுமிந்த மூன்று சொற்கள் எந்த ஆதாரத்தைக்கொண்டு ஸ்வாமியாலருளிச் செய்யப்பட்டனவென்று விசாரம் செய்யுமளவில், ஆழ்வார்களின் திவ்யஸூக்திகளை ஆதாரமாகக் கொண்டுதானென்று நிர்ணயிக்க ப்ராப்தம்.

ஆழ்வார்கள் 'தாமரைக்கண்ணன்' என்று சிலவிடங்களிலும் "தாமரைத்தடங்கண்ணன்" "கமலத்தடங்கண்ணன்" "கமலத் தடம் பெருங்கண்ணன்" என்று பலவிடங்களிலுமருளிச் செய்துபோருகிறார்கள். வடமொழியிலுள்ள லகரமும் ளகரமும் தென் மொழியில் டகரமாக மாறுபடுவதுமுண்டு; "லடயோரபேத;" என்கிற நியாயம் ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரஜ்ஞர்களுமிசைந்ததே, தமிழர்கள் எழுத்துப்போலியென்பர்கள். ஏவஞ்ச, 'பத்ரம் பலாசம் ச்சதநம் தளம் பர்ணம் ச்சத: புமாந்" என்ற அமர கோசத்தில படிக்கப்பட்ட தளமென்கிற வடசொல்லே தமிழில் தடமென்றாயிற்று என்று திருவுள்ளம் பற்றிய எம்பெருமானார் 'கமலத்தடங்கண்ணன்' 'தாமரைத்தடங்கண்ணன்' என்னுமிடங்களிலே தளமென்னும் பொருளிலே தடமெனவந்ததென்று கொண்டு "புண்டரீகதள' என்றருளிச்செய்தார். தடமென்னுஞ் சொல்லுக்கு விசாலம் என்கிற பொருளும் தடாகமென்கிற பொருளும் தளமென்கிற பொருளும் ஆங்காங்கு வியாக்கியானகர்த்தாக்களால் ஆதரிக்கப்படுகின்றன. "நீலத்தடவரைமேல் புண்டரீக நெடுந்தடங்கள் போல..........எம்பிரான் கண்ணின் கோலங்களே" என்ற திருவிருத்தப்பாசுரத்தில் தடமென்பதற்கு தடாகமென்பது பொருள்.

"கமலக்கண்ணன்........அமலங்களாகவிழிக்கும்" என்கிற நம்மாழ்வார் பாசுரத்தையுட்கொண்டே "புண்டரீகதளாமல....ஈக்ஷண:" என்றார் ஸ்வாமி. கீழே காட்டிய பாசுரங்களையும், "கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட வப்பெரியவாய கண்கள்" என்கிற அத்விதீயமான திருப்பாணாழ்வார் பாசுரத்தையும் அநுஸந்தித்துக் கொண்டே "புண்டரீக .. ஆயதேக்ஷண:" என்றார். (தொடரும்.)

ஸ்ரீ ரஸ்து.

# அதிமாத்ரஸந்தோஷமும் அத்யந்தஸங்கடமும்.

(பத்ராதிபர்— ஆ. அண்ணங்கராசாரியர்.)

அளவு கடந்த ஸந்தோஷத்தையும் அளவு கடந்த ஸங்கடத்தையும் எனது கையாலெழுதுகிறேன் என்பால் மிக்க அன்புகொண்ட பெரியாரும் சிறியாரும், காஞ்சீவாஸிகளும் தேசாந்தாவாஸிகளும் இக்கட்டுரையை ஆழ்ந்து வாசிக்கவேணுமென்பது முந்தியவேண்டுகோள். அதிமாத்ரஸந்தோஷத்தை முன்னம் விவரித்து, அத்யந்த ஸங்கடத்தை அடுத்தபடியாக விவரிக்கிறேன். அத்யந்த ஸந்தோஷத்தை விவரிக்கும்போது ஆத்மப்ரசம்ஸை தலைகாட்டுவதாகவோ தலையெடுத்திருப்பதாகவோ நினைக்க நேரும். அதனால் ஒரு ஹானியுமில்லை. நன்னூலில் சில ஸந்தர்ப்ப விசேஷங்களை யெடுத்துரைத்து, அவற்றில் "தன்னைப் புகழ்தலும் தகும் புலவோற்கே" என்று சூத்திரமிட்டிருக்கையாலே தற்புகழ்ச்சியும் ஒருவாறு பொருந்தக் குறையில்லை. இக்கட்டுரைக்குக் கீழே வெளியிட்டிருக்கிற "ஸ்ம்சிரஸ்மரணீய மஹநீயஸ்மரணம்" என்னும் மகுடம் புனைந்துள்ள கட்டுரையில் சில ஏடுகளை மட்டும் வாசித்துப் பார்த்தாலே அடியேன் எத்தனை மஹநீயர்கள் பக்கலில் எவ்வளவு சிரமப்பட்டு எவ்வளவு கல்விகள் கற்றிருக்கிறேனென்பது தெரியவரும். நான் எழுதி வெளியிட்டுள்ள எண்ணிறந்த நான்கு பாஷைப் புத்தகங்களைக் கொண்டு, அறிவது ஒரு புறமிருக்க.

எனது பதினெட்டாம் பிராயத்தில், இற்றைக்கும் திருவல்லிக்கேணியில் நடந்துவரும் வேத வேதாந்த வர்த்தி நீ ஸபா பரீக்ஷையில் நாலாயிர திவ்யப்ரபந்தத்தை வியாக்கியானங்களோடுங்கூட பரீக்ஷை கொடுக்கப் போயிருந்தேன். எப்படிப்பட்ட பரீக்ஷை? ஸூர்க்கத்திப் பரீக்ஷை யென்று பெயர். (அதாவது) ஸூர்க்கத்தியைத்தீட்டி எதிரே வைத்து விட்டுப் பக்ஷிப்பது; தவறினால் கத்தியினால் நாக்கையறுக்க இசைந்து நிற்பது. ஸ்ரீவைஷ்ணவர்கள் நாக்கையறுக்கத் துணிவார்களா? என்பது வேறு விஷயம். இப்படி துணிந்து கூறினேன். இது உலகம் பரவிப் பலவாயிரக்கணக்கான ஜனங்கள் குழுமிவிட்டார்கள்.

அக்காலத்தில் திருமழிசையில் ஸுப்ரஸித்த மஹாவித்வானக எழுந்தருளியிருந்த ஸ்ரீ.உ. வே புத்தாம். வரதாசாரியர்ஸ்வாமிபரீக்ஷகர். அடியேனைக் கேட்டார்; "எம்பெருமானுடைய திருவடிகளைக் கமலப்பூவோடு ஒப்பிட்டு வருணிப்பது போலே கமலபந்துவோடே (ஸூர்யனேடே) ஒப்பிட்டு வருணித்தவிடம் உண்டா? சொல்லும்—என்ருர். உடனே "சொல்லமாட்டேனடியேன்" என்றேன். இதன் மருமம் தெரிந்தவர்களும் தெரியாதவர்களுமெல்லாம் உடனே கைதட்டத் தொடங்கிஞர்கள். சொல்லமாட்டேனென்றதைக் கொண்டு ஸாமான்ய ஜனங்கள் கைதட்டினர். திருவாய்மொழி எட்டாம்பத்தில் *மாயக் கூத்தாவாமனவென்னும் ஐந்தாம் பதிகத்தில் (5)* சொல்லமாட்டேனடியேன்* என்ற பாசுரத்தில் *உன்துளங்கு சோதித் திருப்பாதம் எல்லையில் சீரிளஞாயிறிரண்டு போலென்னுள்ளவா* என்றிருப்பது சிலரேயறியும்படியான பரீக்ஷோத்தரம்.

மற்ருெரு கேள்வி கேட்டார்; நாச்சியார் திருமொழியில் முதற்பதிகத்தில் (9) தொழுது முப்போது முன்னடி வணங்கியென்கிற பாசுரத்தை யெழுதிக் காட்டும்—என்ருர். பாட்டை முழுதுமெழுதாமல் "பார்க்கடல் வண்ணனுக்கே" என்பதை மட்டும் எழுதினேன். "நான் பாட்டை முழுதும் எழுதும்படியன்ருே சொன்னேன்" என்ருர். "க்ஷீராப்தியென்னும் பொருள்கொண்டு பாற்கடல் என்று எழுதுவேனென்று தேவரீர் கருத்து; பார்சூழ்ந்தகடல் என்று வியாக்கியானமாகையாலே அவ்விடத்தில் அடியேனுக்கு மருளில்லாமையைக் காட்டினேன்" என்றேன். உடனே அந்த ஸ்வாமி "இவரைப் பரீக்ஷிக்கயாராலும் முடியாது" என்று சொல்லிப் பரீக்ஷாஸதஸ்ஸை முடித்திட்டார். அந்தத் திருவல்லிக்கேணி ஸபைக்கு அடுத்தடுத்து மூன்று நான்கு வருடங்கள் பரீக்ஷ்யனகச் சென்றேன்; அங்கு மட்டுமன்று; வேறு சிலவிடங்களிலும் ஆச்சரியமான பரீக்ஷைகள் நடந்திருக்கின்றன. சிலவற்றைப் பழைய (மிகப்பழைய) ஸ்ரீ ராமாநுஜனிதழ்களிலும் அம்ருதலஹரியிலும் கண்டேயிருக்கின்றதுலகம். ஒன்று மட்டும் இங்கு நினைவூட்டுகிறேன்; ஒரே நிமிஷத்தில் (திவ்யப்ரபந்தத்தில்) முப்பது கேள்விகள் கேட்கிறேன்; காகிதத்தை யெடுத்துக்கொள்ளும்; பத்து நிமிஷத்தில் வரிசையாக விடையெழுதவேணும் என்று சொல்லி, *வண்ண மாடங்கள்சூழ்* என்கிற பாட்டைச்சொல்லி "இப்பாட்டிலுள்ள ஒவ்வொரு சொல்லையும் முதலிற்கொண்ட பாசுரங்களை அடைவே எழுதும்

என்றார்; உடனே பத்தே நிமிஷத்தில் எழுதிக்காட்டினேன்; அது வருமாறு;—

1 வண்ண—வண்ண நன் மணியும் மரதகமும்
2 மாடம்—மாட மாளிகை சூழ் திருமங்கை
3 கள்—கள்வா வெம்மையுமேழுலகும்
4 சூழ்—சூழ்ச்சி ஞானச் சுடரொளி
5 திரு—திருவுக்குந்திரு
6 கோட்டி—குறிப்பெனக்குக் கோட்டியூர்
7 ஊர்—ஊரவர்கவ்வையெருவிட்டு
8 கண்ணன்—கண்ணனென்னுங்கரு
9 கேச—இருடீகேசன்
10 வன்—வன்பெருவானக முய்ய
11 நம்பி—நம்பியைத்தென்
12 பிறந்த—பிறந்தவாறும்
13 இன்—இன்றாக நாளையேயாக
14 இல்—இல்லதுமுள்ளதும்
15 எண்ணெய்—எண்ணெய்க் குடந்தை
16 சுண்—என்ன சுண்டாயங்களால்
17 ணம்—வண்ணம் திரிவும் மனம்
18 எதிரெதிர்—எதிரெதிரிமையவர்
19 தூ—தூவிரியமலருழக்கி
20 விட—விடத்தவாயொராயிரம்
21 கண்—கண்ணார்கடல்போல்
22 நல்—நல்லார் நவில் குருகூர்
23 முற்றம்—முற்றத்தூடு புகுந்து
24 கலந்து—கலந்து நலியும்
25 அளறு—அளறலர் தாமரைக் கண்ணன்
26 ஆயிற்று—ஆயிற்றாய்ப்பாடியே
27 ஏ—ஏபாவம்பரமே.

இத்தகைய பரீக்ஷைகள் இருக்கட்டும்; வேடிக்கையான பரீக்ஷைகளில் ஒன்று கேளீர்; "கண்ணா! திருவரங்கம் பெரிய கோயிலில் பகல்பத்து பத்து நாளும் மிகச்சிறந்த திருநாள்; நாளை புறப்பட்டுச் சென்றால் இருபது நாள் பேரின்ப வெள்ளம் காணலாம்-என்று சொல்லி, இந்த வார்த்தையிலுள்ள சொற்களுக்கு அடைவே பாசுரங்கள் ஆலோசியாமல் எழுதும்-என்பதொரு பரீக்ஷை; உடனே ஐந்துநிமிஷத்தில்எழுதிக் கொடுத்தேன்; (அது வருமாறு;-)

1 கண்ணா—கண்ணா நான் முகனைப் படைத்த
2 திரு—திருநின்ற பக்கம்
3 அரங்கம்—அரங்கமென்பர் நான் முகத்
4 பெரிய—பெரியவரை மார்பில்
5 கோயில்—கோயில் கொண்டான்
6 இல்—இல்லையல்லல்
7 பகல்—பகல் கண்டேன்
8 பத்து—பத்துடையடியவர்க்கு
9 பத்து நாளும்—பத்து நாளுங்கடந்த
மிக—மிக மேனி மெலிவெய்தி
சிறந்த—சிறந்த வென் சிந்தையும்
திரு—திதிருக்கண்டேன்
நாள்—நாளேலறியேன்
நாளை—நாளை வதுவை மணம்
புறப்பட்டு—பொட்டப்போய்ப்புறப்பட்டு
சென்றால்—சென்றால் குடையாம்
இருபது—இருபது புயம் துணித்தான்
நாள்—நாள்களோர் நாலைந்து
பேரின்ப வெள்ளம்—பேரின்ப வெள்ளம் பெருக
காணல்—காணலுறுகின்றேன்
ஆம்—ஆமுதல் வனிவன்

இப்படிப்பட்ட பரீக்ஷைகள் தென்னாட்டு யாத்திரையில் ஒவ்வோரூரிலும் நடந்திருக்கின்றன. இவையெல்லாம் வேதாத்யயனம் பண்ணுவதற்கு முன்னே நடந்தவை

இருபத்திரண்டாவது பிராயம் முதல் இருபத்தேழாவது பிராயம் வரையில் வேதாத்யயநம் பண்ணி முடிந்த பின் நடந்த பரீக்ஷைகளைப் பற்றிப் பிறகு விஜ்ஞாபிக்கிறேன். ஒரு சிறிய அற்புதம் கேளீர். ஸ்ரீ ஜகத்குரு காதி ஸ்வாமி கஜ துரகபதாதிகளுடன் தென்னாட்டு யாத்திரையை விசேஷவைபவமாகச் செய்தருளின காலத்திலே எட்டுமாதம் அடியேனும் ஸஹாத்யாயிகளுடன் கூடச்செல்ல நேர்ந்தது. மலையாளச் சிந்தூர் என்கிற ஊரில் தங்க நேர்ந்தது. அவ்விடத்து விசேஷம் மிக மிக அற்புதமானது. பெரிய ஸம்ஸ்க்ருத காலேஜ் ஒன்று; அதில் நான்கு சாஸ்த்ரங்களும் ப்ரவசனமாகிறது. ஸ்மார்த்த மாத்வர்கள் தவிர ஸ்ரீ வைஷ்ணவர்களின் பேச்சே கிடையாது. [திருச்சூர் - எரணாகுளம் போகிறவழியில் இவ்வூர் உள்ளது.] நான்கு சாஸ்த்ரங்கள் போலே நான்மறைகளும் ஓதுவிக்கப்படுகின்றன. நாங்கள் இவ்விடம் போயிருந்த போது ஓர் மஹோத்ஸவ விசேஷம், நாற்பத்து நான்கு நாள் ஸங்கல்பித்துக் கொண்டு பதினைந்து வைதிகர்கள் அக்ரஹாரப்ரதக்ஷிணமாக க்ருஷ்ணயஜுர் வேதக்ரமபாராயணம் நடத்திப் போருகிறார்கள். அதில் விசேஷமென்னவென்றால், பதினைந்து வைதிகர்களும் கைதேறின கனபாடிகள், உட்கார்ந்து பாராயணமில்லை; வீதியில் பாராயணம். பதினான்குபேர்கள் ஒருகக்ஷி சொல்லுவது, ஒருவர் மட்டும் மற்றொருகக்ஷி சொல்லுவது; என்கிற முறையில் நடக்கிறது. ஒருவர் மட்டும் சொல்லுகிற கக்ஷியில் ஒரு நாள் சொல்லவேணுமென்கிற ஆசை எனக்குண்டாகி அவர்களைக் கேட்டுக் கொண்டேன்; சிரமப்பட்டு ஒப்புக்கொண்டார்கள். ஆருவ 5 காண்டம் [*சாத்வால 5*] என்கிற மூன்றாவது ப்ரச்நம் க்ரமபாராயணம் ஆக வேண்டிய நாளில் நான் கலந்து கொண்டேன். ஒரு தவறுதலும் நேராமல் இரண்டு மணி காலம் பாராயணம் நடைபெற்றுமுடிந்தது. அவர்களுக்குண்டான மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. கிரமமாக ஒருவர்க்குப்பதினைந்து ரூபாய் ஸம்பாவனை பண்ணுவது வழக்கமாம். அன்று எனக்கு ஸ்பெஷலாக நூற்றெட்டு ரூபாய் ஸம்பாவனை செய்து அதை ஸ்ரீகாதிஸ்வாமி திருமுன்பே அளித்தார்கள். எனது வாழ்க்கையில் இது எனக்குப் பரமானந்தமான நிகழ்ச்சி. கீழே காட்டிய திவ்யப்ரபந்த பரீக்ஷைகள் போல வேதபரீக்ஷைகளும் பலபல ஆங்காங்கு விசித்திரமாக நடந்தன. சிலவற்றை மட்டும் குறிப்பிடுகிறேனிங்கு. பஞ்ச பூதங்களின் பெயர்களை ஆரம்பமாகக் கொண்ட ஐந்து அநுவாகங்களின் அடியை ஆலோசி

யாமல் சொல்ல வேணுமென்று ஒருபரீக்ஷை; உடனே சொன்ன உத்தரம்.

1. பூமி— *பூமிர் பூம்நா த்யௌர்வரிணாந்தரிக்ஷம்.
2. அப்பு— *ஆப உந்தந்து ஜீவஸே தீர்க்காயுத்வாய.
3. அக்நி— *அக்நிர் மா துரிஷ்டாத் பாது ஸவிதா.
4. வாயு— *வாயுர் ஹிங்கர்த்தாக்நி: ப்ரஸ்தோதா.
5. ஆகாசம்— *த்யௌஸ் தே ப்ருஷ்டம் ப்ருதிவீ.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த வொரு அத்யாபகஸ்வாமி "இதே போல் தமிழ் வேதத்திலும் சொல்ல வேணும்" என்ன; அதற்குச் சொன்னபடி.

1. பூமி— *பூநிலாய வைந்துமாய்.
2. நீர்— *நீராய் நிலனாய்த் தீயாய்க்காலாய்.
3. தீ—*தீயெம்பெருமான் நீரெம்பெருமான்.
4. வாயு—*காற்றினைப் புனலைத்தீயை*
5. ஆகாசம்—*விண்ணீல மேலாப்புவிரித்தாற்போல்.

தொடர்ந்து நடந்த உபயவேத பரீக்ஷைகள் அளவுகடந்தவை. ஆங்காங்கு நடக்கும் பரீக்ஷைகள் இப்படியல்ல; பஞ்சாதியையோ பாசுரத்தையோ அடியிட்டுக்கேட்பதுதான் எங்கும் முறைமை. அதுவொரு வகை. புதுமையான வேத பரீக்ஷையொன்றைச்சொல்லி நிகமிக்கிறேன்.

தேவப்பெருமாள் விஷயமாகஆளவந்தார் அருளிச்செய்தமுக்தகச்லோகம்—

"யஸ்ய ப்ரஸாதகலயா பதிர: ச்ருணோதி
பங்கு: ப்ரதாவதி ஜவேந ச வக்தி மூக:
அந்த: ப்ரபச்யதி ஸுதம் லபதே ச வந்த்யா
தம் தேவ மேவ வரதம் சரணம் கதோஸ்மி" என்பதைச்
சொன்னாரொருவர்.

இதைக்கேட்டவுடனே காகிதத்தையெடுத்துக்கொண்டு சில சொற்களுக்கும் சில எழுத்துக்களுக்கும் அடைவே வேதவாக்குக்களையெழுதிக் கொடுத்தேன். இதை ரஸிப்பவர்கள் யாரேனும் சிலராவது இருக்கக் கூடுமென்று இங்கு எழுதுகின்றேன்;—

1. யஸ்ய–*யஸ்யாஸ்மி ந தமந்தரேமி
2. ப்ர–*ப்ரஜநநம் ஜ்யோதிரக்நிர் தேவதாநாம்
3. ஸாத–*அபாம்த்வேமந்த் ஸாதயாம்யபாம்
4. கலயா–*யத் கலயா தே சபேந தே க்ரீணநி
5. ப–*பபர: ப்ராவாஹணிரகாமயத
6. தி–*தியாதியா க்நந்தி சப்த:–
7. ர:–*ருத்ர இத்யப்ருவந் ருத்ரோ வை க்ரூர:–
8. ச்ர்ணேதி–*யதீக்ம் ச்ர்ணேத்யலகக்ம் ச்ர்ணேதி
9. பம்–*ஆபம் த்வாக்நேமநஸாபம்
10. கு:–*உப மாமுபாகு:
11. ப்ர–*ப்ரஜநயதி*
12. தாவதி–*ஸ்வேந பாகதேயேநோபதாவதி
13. ஜவே:–*ப்ரஜ வேதயந்தி*
14. ச–*சமகப்ரச்நத்தில் பலபல
15. வ–*தேவதா வாயுமேவ
16. க்தி–*யுநக்தி யுங்க்தே யுஞ்ஜாநேஷு
17. மூ–*மூர்த்தாநம்திவோ அரதிம்
18. க:–*கஸ்த்வாச்ச்யதி கஸ்த்வா விசாஸ்தி*
19. அந்த:–*அந்தோ மணிமவிந்தத்
20. ப்ர–*ப்ரார்ப்பயது ச்ரேஷ்டதமாய
21. பச்யதி–*பச்யதி புத்ரம் பச்யதி பௌத்ரம்
22. ஸுதம்–*ஸோமக்ம் ஸுஷுதம் மதுமந்தம்
23. லபதே–*ஸர்வவேதபாராயணபுண்யம் லபதே
24. ச–(சமகப்ரச்நே)
25. வங்–*தந்தும் தந்வந் வயஸ:*
26. த்யா–*தியாதியா த்வா வத்யாஸு:
27. தம்–தம் வை ப்ரவஸந்தம் ஜகாம*
28. தேவம்–*தேவம் தேவத்ரா ஸூர்யம்*
29. ஏவ–*வாயுமேவ ஸ்வேந பாகதேயேந
30. வர–*வரமவ்ர்ணீத*
31. தம்–*சரதம்ருதூநாம்ப்ரீணமி
32. சர–*சரவ்யா யா தவ தயா நோ ருத்ர ம்ர்டய
33. ணம்–*சரணம் பவித்ரம் விததம் புராணம்

34. க-*த்யும்நைர் வாஜேபிராகதம்
35. தோ-*ததோ தேவாநாம் நிரவர்த்ததாஸு:
36. ஸ்மி-*யோஹமஸ்மி ஸ ஸந் யஜே.

இந்த ப்ரச்நோத்தரங்களெல்லாம் இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்பு நடந்தவை. (இடையில் ஓர் அதிசயம்). இந்த *யஸ்யப்ரஸாத கலயாச்லோக பரீக்ஷோத்தரங்கள் காஞ்சீபுரம் ஸன்னிதியில் நூற்றுக் கால் மண்டபத்தில் நடந்தவை. அப்போது ஸகல வைதிகர்களும் மிக மிகக் கொண்டாடினார்கள்; ஒருவர் மட்டும் ''இதில் என்ன அதிசயம்! வேதம் கண்டஸ்தமாயிருப்பவர்களுக்கு வேதத்திலுள்ள பதங்களும் அக்ஷரங்களும் ஸ்புரிப்பதில் என்ன ஆச்சரியம்? என்றார். உடனே அவரைக் கேட்டேன்; தேவரீர் வேதத்தைப் பூர்த்தியாக ஓதினவர் தானே; தேசிகன் தேவப்பெருமாள் விஷயமாக ஸாதித்த வரதராஜ பஞ்சாசத்தின் முதல் சுலோகம் *த்விரதசிகரிஸீம்நா ஸத்மவாந் பத்மயோநே:* என்பது கண்டஸ்தந்தானே; இந்த ஒரு பாதத்தை மட்டும் வேதத்திலுள்ள அக்ஷரங்களாலும் பதங்களாலும் நிரப்பிக்காட்டலாமா? என்றேன். என்ன தடை? என்று காகிதத்தைக் கையிலெடுத்துக் கொண்டார்; *த்வே வாவ தேவஸத்ரே* என்று முதலிட்டார். சுலோகத்தில் த்வி என்றிருக்கிறதேயொழிய(த்வே)என்றில்லையே! என்றேன். ஓஹோ! அப்படி நியமமோ என்று சொல்லிவிட்டு ஆலோசிக்கத் தொடங்கினார். ஸந்த்யாவந்தன வேளையாயிற்று; நாளைக்குக் கூடுவோம் என்றெழுந்தார். மற்றொரு வைதிகர், "இதற்கு தேவரீர் ஸாதிக்கலாமே'' என்றார். உடனே காகிதத்தில்—

1. த்வி-*(அதிதி: புத்ரகாமா) *ஸா த்விதீயமபசத்
2. ரத-*சரதம்ருதூநாம் ப்ரீணாமி.
3. சி-*சிவேந மா சக்ஷுஷா பச்யத*
4. கரி-*க்ருஷ்ணேஸ்யாகரேஷ்ட:*
5. ரி-விச்வதஸ்பரிஹவாமஹே*
6. ஸீ-*புரோஹிதோ தேவாநாமாஸீத்*
7. ம்நா-*ஸும்நாய ஸும்நிநீ*
8. ஸத்ம-*வித்மா தே ஸத்ம விப்ருதம்
9. வாந்-ஸஸ்வாந் ஸந்ஸ்தூயஸே*
10. பத்ம-*பத்மே ஸ்திதாம் பத்ம வர்ணாம்
11. யோ- யோ வை ஸப்ததசம் ப்ரஜாபதிம்

12. நே-"நேவ து புநராகச்சதி

13. ஸ்து-*ஸ்துதசஸ்த்ரே ஏவைதேந துஹோ"

இந்த பரீக்ஷாவிஷயங்களின் ப்ரஸ்தாவம் இவ்வளவோடு போதும். திருத் தகப்பனார் அடியேனைப் பரீக்ஷித்தவற்றைச் சிறிது எழுதுகிறேன். இப்பகுதியே எனக்கு ப்ரஹ்மானந்த ஸந்தோஹ மானது. ஆழ்வாராசார்ய ஸ்ரீ ஸூக்திகளிலும் காவ்ய நாடகாலங்கார நூல்களிலும் திருத்தகப்பனார் பதினான்காவது பிராயத்தில் அடியேனைப் பரீக்ஷித்த வற்றையும், உடனுக்குடனே அடியேன் விடையிறுத்த வற்றையும் நினைவுபடுத்திக்கொண்டு விஜ்ஞாபிக்கிறேன். கேண்மின் காண்மின். என்னுடைய ஸந்தோஷாதிசயங்களில் இவையே தலையானவை. இங்ஙனே பரீக்ஷிக்கவும் விடையிறுக்கவும் இக்காலத் தில் அதிகாரிகளில்லையென்று சொல்லாமலிருக்க முடியவில்லை. இடை யிடையே திருத்தகப்பனார் கண்ணீர் பெருக்குவர்; பக்கத்திலிருக்கும் பாட்டி [பிதாமஹி] என்னரங்கஸாமீ! ஏன் அழுகிறாய்? என்பள்; பின்னையும் அழுவர் பிதா. *தேஹி நோ திவஸா கதா:" என்று இன் றும் அழுதுகொண்டே இதையெழுதுகிறேன். கீழே குறிப்பிட்ட பரீக்ஷைகள் ஏகதேசம். அவற்றை மறந்துவிடலாம்........."

1. பூமிப் பிராட்டிக்கு ஸாமாந்யமாக மலையைக் கொங்கையாகச் சொன்னவர்யார்? திருமாலிருஞ்சோலையையும் திருவேங்கடமலையையும் கொங்கையாகச் சொன்னவர் யார்? (விடை) இருவருமொருவரே— திருமங்கையாழ்வாரே; சிறியதிருமடலில் காரார் வரைக் கொங்கை என்று ஸாமாந்யமாக வருளிச் செய்தார்; பெரிய திருமடலில்" தென் னனுயர்பொருப்பும் தெய்வ வடமலையும் என்னுமிவையேமுலையா வடிவமைந்த அன்ன நடைய வணங்கே."

2. ஒரு ஆசார்யரைத்தான் வணங்குகிறேனென்றவர் யார்? எல்லா ஆசாரியர்களையும் வணங்குகிறேனென்றவர் யார். (விடை) யதிராஜ ஸப்ததி தொடக்கத்தில்" கமப்யாத்யம் குரும் வந்தே கமலா க்ருஹமேதிநம், ப்ரவக்தாச்சந்தஸாம் வக்தா பஞ்சராத்ரஸ்ய யஸ் ஸ்வயம்" என்று எம்பெருமானொருவனை வணங்குவதாக (யதிராஜ ஸப் ததியில்) ஸாதித்தவர் தேசிகன். "லக்ஷ்மீநாதஸமாரம்பாம்" என்கிற

சுலோகத்தில் ஸகலாசார்யர்களையும் வணங்குகிறேனென்றார் கூரத்தாழ்வான்.

3. ஒரே பாசுரத்தில் க்ருஷ்ணசேஷ்டிதங்கள் பத்து அநுபவிக்கப்பட்டிருக்கின்றனவல்லவா? அந்தப் பாசுரம் சொல்லு. (விடை)* *அரவமடல் வேழம் ஆன்குருந்தம் புள்வாய், குரவை குடமுலைமல் குன்றம்—கரவின்றி, விட்டிறுத்து மேய்த்தொசித்துக்கீண்டு கோத்தாடி, உண்டட்டெடுத்த செங்கணவன்* என்கிற பொய்கையார் பாசுரம்.

4. நிபீய-எங்கே? ஆபீய எங்கே? பீத்வா எங்கே? (விடை)* *அஸ்மத்கில ச்ரோத்ரஸுதாம் நிபீய ரம்பா சிரம் பாம் அதுலாம் நலஸ்ய; தத்ராநுரக்தா தமநாப்ய பேஜே தந்நாமகந்தாத் நளகூபரம் ஸா* நைஷதகாவ்யே ஹம்ஸபக்ஷி நளமஹாராஜனுக்குச் சொல்லுவதில் (நிபீய)— *கரசரணஸரோஜே காந்திமந்நேத்ரமீநே ச்ரமமுஷி புஜவீசிவ்யாகுலே அகாதமார்க்கே, ஹரிஸரஸி விகாஹ்ய ஆபீய தேஜோஜலௌகம் பவமருபரிகிந்ந: கேதமத்ய த்யஜாமி* என்கிற முகுந்தமாலா ச்லோகத்தில் (ஆபீய)—; *வந்தே தம் யமிநாம் துரந்தரமஹம் மாநாந்தகாரத்ருஹா பந்தாநம் பரிபந்திநாம் நிஜத்ருசா ருந்தாநமிந்தாநயா, தத்தம் யேந தயாஸுதாம்புநிதிநா பீத்வா விசுத்நம் பய: காலே ந: கரிசைலக்ருஷ்ணஜலத: காங்க்ஷாதிகம் வர்ஷதி* என்கிற யதிராஜஸப்ததிச்லோகத்தில் (பீத்வா); [திருத்தகப்பனார் அடியேனுக்குப் பஞ்சஸ்தவாதிகளோடொக்க ஸ்ரீதேசிகஸ்தோத்ரங்களையும்ஸந்தை சொல்லிவைத்தார்; அவற்றில் இற்றைக்கும் பரீக்ஷைகொடுக்க இயலும்].

5. எம்பெருமானைக் கடலாகச்சொல்லி நிரூபணம் செய்தருளின ஆழ்வார்யார்? அவனைத்தடாகமாகச்சொல்லி நிரூபணம் செய்தருளின ஆழ்வார் யாவர்?. (விடை) *நீண்டமலைகளும் மாமணியும் மலர்மேல் மங்கையும் சங்கமும் தங்குகின்ற, அலைகடல் போன்றிவரார் கொலென்ன அட்டபுயகரத்தேனென்றாரே* என்றவர் திருமங்கையாழ்வார். *சாயல்சாமத்திருமேனி தண்பாசடையா தாமரைநீள் வாசத்தடம் போல் வருவானே ஒருநாள் காணவாராயே* என்றவர் நம்மாழ்வார்.

6. மண்மயமான பாத்திரமேயுள்ளது; பொன்மயமானபாத்திர மில்லை என்றது எங்கே? (விடை) *ஸம்ருந்மயே வீதஹிரண்மயத்வாத் பாத்ரே நிதாய* என்றது ரகுவம்சம் ஐந்தாவது ஸர்க்கத்தில்.

7. திருக்காவேரியில் தீர்த்தம் தெளிந்திருக்கிறது என்றவா யார்? அது கலங்கியிருக்கிறது என்றவர் யார்? (விடை) *திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி திரைக்கையாலடிவருடப்பள்ளி கொள்ளும்* என்று தெளிந்த தீர்த்தமென்றவர் குலசேகராழ்வார்; *தெளிவிலாக்கலங்கல் நீர்சூழ் திருவரங்கம்* என்றவர் தொண்டரடிப் பொடிகள்.

8. தாவதி என்றது எங்கே? அநுதாவதி என்றது எங்கே? (விடை) *கச்சதி புரச்சரீரம் தாவதி பச்சாத் அஸம்ஸ்துதம் சேத:; சீ நாம்சுகமிவ கேதோ: ப்ரதிவாதம் நீயமாநஸ்ய* என்றது சாகுந்தல நாடகே. *லௌகிகாநாம் ஹி ஸாதூநாம் அர்த்தம் வாகநுவர்த்ததே, ருஷீணாம் புநராத்யாநாம் வாசமர்த்தோநுதாவதி* என்றது முராரி நாடகே.

9. பெரியாழ்வார் தனியனில் *குருமுகமநதீத்ய ப்ராஹ வேதாநசேஷாந்* என்றிருக்கிறதே; அதைப்பற்றி உனக்குத் தெரியுமா? (விடை) தேவரீர் சொல்லிவைத்திருப்பதை மறக்கமுடியுமா? நன்றாக நினைவு வைத்துக்கொண்டிருக்கிறேன்; விஜ்ஞாபிக்கிறேன். பெரியாழ்வார்தாமே தமது திருமொழியில் *என்னுள்ளே பீதகவாடைப் பிரானார் பிரம குருவாகி வந்து* என்றும், *எயிற்றிடைமண் கொண்ட வெந்தை இராப்பகலோதுவித்து, என்னைப் பயிற்றிப் பணிசெய்யக் கொண்டான்* என்றுமருளிச் செய்திருக்கையாலே, அஸ்மதாதிகளைப் போலே ஸாமாந்ய (மாநுஷ) குருக்களிடத்திலே அத்யயனம் பண்ணாதவர் என்றபடி. ஸாக்ஷாத் பகவானிடத்திலே அத்யயநம் பண்ணினவர்; *மயர்வறமதிநலமருளப் பெற்றவர் என்றபடி. ... ... *

10. மேலே மேலே என்றவர் யாவர்? கீழே கீழே என்றவர் யாவர்? (விடை) இரண்டும் சொன்னவர் ஒருவரே; ஒரே க்ரந்தத்திலே ஸ்தோத்ரரத்நே *உபர்யுபர்யப்ஜபுவோபி பூருஷாந் ப்ரகல்ப்ய தே யே சதமென்றவிடத்து மேலேமேலேயென்றது. (தத்ரைவ) *ஜநித்வாஹம் வம்சே மஹதி ஜகதி க்க்யாதயசஸாம்.......அதோத: பாபாத்மா சரணத! நிமஜ்ஜாமி தமஸி* என்று கீழேகீழேயென்றவருமவரே.

11. பூக்களை எங்கெங்கே காணலாம்; எந்தப் பூவை எங்கே காணலாம்? (விடை) *நீர்ப்பூ நிலப்பூ மரத்திலொண்பூ* என்று திருவிருத்தத்தில் ஆழ்வார் அருளிச்செய்கையாலே நீரிலும் நிலத்திலும் மரத்திலுங் காணலாம். தாமரை செங்கழுநீர் முதலியவற்றை நீரிலே காணலாம்; குருக்கத்தி மல்லிகை முல்லை தாழை முதலானவற்றை நிலத்திலே காணலாம்; செண்பகம் புன்னை மகிழ் பாரிஜாதம் முதலானவற்றை மரத்திலே காணலாம். எல்லாவற்றையும் பெருமாள் திருமேனியிலே காணலாம்.

12. வண்டுகளைத் தூதுவிடுகிற ஆழ்வார்க்கு இவை தூதுபோகமாட்டாத அஃறிணைப் பொருள்கள் என்று தெரியாதா? தெரிந்தும் ஏன் அவற்றைத் தூதுவிடுகிறார்? (விடை) நம்மாழ்வார் முதன் முதலாக வண்டுகளைத் தூது விடத்தொடங்கினது முதற் பிரபந்தமாகிய திருவிருத்தத்தில்; அதில் *எம்மீசர்விண்ணோர் பிரானார் மாசின் மலரடிக்கீழ் எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே* என்று வண்டுகளை விசேஷித்திருப்பதை நோக்கவேணும். இதைத் திருவுள்ளம் பற்றியே ஆசார்ய ஹிருதயத்தில் "சேர்ப்பாரைப் பக்ஷிகளாக்கி ஜ்ஞானகர்மங்களைச்சிறகென்று குரு ஸப்ரஹ்மசாரி புத்ர சிஷ்யஸ்தாநே பேசும்" என்றருளிச்செய்தது.

13. ஒன்று முதல் பத்து லக்கங்களை முற்கொண்ட பத்துப் பாசுரங்களைச் சொல்லு. (விடை) (1). ஒரு நல் சுற்றம். (2). இருமலை போலெதிர்ந்தமல்லர். (3). மூன்றெழுத்ததனை மூன்றெழுத்ததனால் மூன்றெழுத்தாக்கி. (4). நாற்றிசைத் தீர்த்தம் கொணர்ந்து. (5). பஞ்சவர் தூதனாய். (6) ஆறெனக்கு நின்பாதமே. (7). ஏழு மாமரம் துளைபடச் சிலைவளைத்து. (8). எட்டுத் திசையுமெண்ணிறந்த. (9). நிதியினைப் பவளத்தூணை [நவநிதிகளாதலால் ஒன்பது லக்கம் ஸூசிதம்]. (10). பத்துடையடியவர்க்கெளியவன். .... ... .... *

14. கீழ் நடந்த பரீக்ஷையிலேயே சிறிது மாறுபாடு. விடை கூறுவதில் பாசுரத்தின் முதலடியாகவல்லாமல் ஈற்றடியாக இருக்க வேணுமென்று. (விடை) *ஏகமேந்தி நின்ற நீர்மை. (2) *ஒன்றிரண்டு கண்ணினனு முன்னையேத்தவல்லனே. (3) *மூவுலகு முருகுமே. (4) நாற்றிசையுங்கொண்டாடும் நாள் [உபதேச ரத்தினமாலை]. (5)*அஞ்சாதிருக்கவருள். (6)*உய்யுமாறெண்ணி யுகந்தேலோ ரெம்பா

வாய். (7) *துயரறுசுடரடி தொழுதெழு. (8) அரியாயிருந்தான் திருநாமமெண். (9) *ஒன்பதோடொன்றுக்கும் மூவுலகுமுருகுமே. (10) *இவை பத்தும் வீடே.

15. ஆளி சிங்கம் ஆனை புலி முதலான பெருத்த ஜந்துக்கள் முதல், மீன் ஆமை முதலான சிறிய ஜந்துக்களின் பெயரை முற்கொண்ட பத்துப் பாசுரங்களைச் சொல்லு. (விடை) (1) செங்கணாளியிட்டிறைஞ்சும் சிங்கவேழ் குன்றுடைய. (2) *சிங்கமதாயவுணன் திறலாகம். (3) அக்கும்புலியினதளுமுடையார். (4) *ஆனைகாத்தோரானை கொன்று. (5) *எருதுகளோடு பொருதி. (6) *கன்றினை வாலோலைகட்டி. (7) மீனமர் பொய்கை நாண்மலர். (8) *ஆமையாய்க்கங்கையாயாழ் கடலாய். (9) *வாராகமதாகி. (10) *அன்னமாயன்றங்கரு மறைபயந்தாள்.

16. இதிஹாஸ புராணங்களில் ஆகரம் தெரியாத பகவத்கதைகள் திவ்யப்ரபந்தத்தில் எத்தனையுண்டு? (விடை) (1) *சீமாலிகனவனோடு தோழமைக் கொள்ளவும்வல்லாய். (2) *மல்லிகை மாமாலை கொண்டு அங்கார்த்ததுமோரடையாளம். [இவையிரண்டும் பெரியாழ்வார்]. (3) *மாகமாநிலம் முழுதும் வந்திறைஞ்சும் மலரடிக்கண்ட [திருமங்கையாழ்வார்]. (4) *குரங்குகள் மலையை தூக்க. [திருமாலை]

17. ஓர் ஆசாரியர் "எல்லாம் ஸஹித்துக் கொள்ளுகிறேன்" என்றும் "ஒன்றை மட்டும் ஸஹிக்கமாட்டேன்" என்றும் சொல்லியிருக்கிறாரே; அவர் யார்? எங்கே ஸாதித்திருக்கிறார்? சொல்ல முடியுமா? (விடை) எனக்கு மறதி கிடையாது; தேவரீர் ஸாதித்ததை விஜ்ஞாபிக்கிறேன். ஸ்தோத்ரரத்நத்தில் *அபூதபூர்வம் மம பாவி கிம் வா ஸர்வம் ஸஹே மே ஸஹஜம் ஹி து:க்கம்* என்றது எல்லாம் ஸஹிப்பேனென்றவிடம். (தத்ரைவ) *நதேஹம் ந ப்ராணந்........தவ சேஷத்வவிபவாத் பஹிர்ப்பூதம் கிமபி ந ஸஹே என்றது ஸஹிக்கமாட்டேனென்றவிடம்.

18. எம்பெருமானைத் தேடுபவர் யார்? எம்பெருமான் தான் தேடினது யாரை? (விடை) *தேடித்திருமாமகள் மண்மகள் நிற்ப* என்ற பெரிய திருமொழியின்படி ஸ்ரீதேவி பூதேவிகள் எம்பெருமானைத் தேடுபவர். (உத்தரராமசரிதே) *அந்வேஷ்டவ்யோ யதஸி புவநே

லோகநாதச் சரண்யோ மாம் அந்விஷ்யந்திஹ* என்றபடி *செறி நவச்சம்புகள் தன்னைச் சென்று தேடினவன் இராமபிரான். ... *

இந்த பரீக்ஷை இவ்வளவோடு நிற்க. .... .... **

## ஸுசப்த-அபசப்தவிஜ்ஞாநம்.

தென்மொழியிலாகவுமாம் வட மொழியிலாகவுமாம்; இன்னது ஸுசப்தம், இன்னது அபசப்தம் என்கிற பகுத்தறிவு எவ்வளவு படித்தவர்களுக்கும் எளிதாக உண்டாகக்கூடியதன்று; "ஸ்ரீமதே ராமாநுஜாய நமஹா" என்று எழுதுமவர்களை இற்றைக்குங் காண்கிறோம். "வரவு சிலவு கணக்கு" என்று எழுதாதவர்கள் மிகச்சிலரே. "சிலவு என்றெழுதுகிறீரே; சின்றுன், சில்லுகிறுன் என்றெழுதுகிறீரா?" என்று கேட்டால் "அதற்கும் இதற்கும் என்ன ஸம்பந்தம்?" என்பர்கள். வரவு சிலவு பொத்தகம் என்று அச்சிட்டு வைத்துக்கொண்டிருப்பவர்களுமுளர்.

ஒருவன் என்கிற ஆண்பாலுக்குப் பெண்பால் என்ன? என்று வினவினுல், ஒருவள் என்பவர்கள் மலிந்திருக்கிறுர்களேயொழிய ஒருத்தி என்பாரைத் தேடிப்பிடிக்கவேண்டும். "இங்கே நித்ய காலக்ஷேபம் குரைவர நடந்துவருகிரது" என்றெழுதுகிற பகவத் விஷயாதிகாரிகள் இக்காலத்திலும் மலிந்துள்ளார்கள். தென்மொழியாளர்களின் செய்தி கிடக்கட்டும்; வடமொழியாளர்களின் செய்தியைப் பேசப்புக்கால் விசித்திரமாயிருக்கும். அடியேனுடைய திருத்தகப்பனுர் எப்படிப்பட்ட பாஷ்யாந்த பண்டிதர்களையும் பல்லைப்பிடித்துப் பார்க்காமலிரார். அக்காலத்தில் உலகத்திலேயே ஸம்ஸ்க்ருத பண்டிதர்கள் மலிந்திருப்பர்கள்; பாஷாந்தரப்ரசாரமும் உத்யோகஸ்தர்களும் மிகக் குறைந்திருந்தபடியால் தென்கலைபாரோ வடகலையாரோ பண்டிதர்களென்று காஞ்சிக்கு வந்தால் ஒருவர்கூடத் திருத்தகப்பனுரிடம் வராமற்போகார். வந்தவர்களைத் திருத்தகப்பனுர் பரீக்ஷியாமலிருக்கவும்மாட்டார். மிக இளமையிலும் அவற்றை அடியேன் பக்கத்திலிருந்து கவனியாமலிருப்பதுமில்லை. ஒருநாள் விலகியிருந்தேனுகில் ப்ரஹாரம் கிடைத்துவிடும். பண்டிதர்களோடு நடந்த சர்ச்சைகளைப் பெரும்பாலும் நினைவு வைத்துககொண்டிருக்கிறேன். சில ஸமயங்களில் அவற்றை நினைத்து உள்ளுக்குள்ளேயே சிரித்திடுவேன். ஒன்றிரண்டு கேண்மின்.

வியாகரணப்புலியென்று வந்தவொருவரைக் கேட்கிறுர் திருத்தகப்பனுர்:-"சப்தமஞ்ஜரியில் கர்த்ரு சப்தம் சுசி சப்தம் ம்ருது சப்தம்

இவை நபும்ஸகலிங்கமாகவே படிக்கப்பட்டிருக்கின்றனவே, இவை பும்லிங்க ஸ்த்ரீலிங்கங்களில் கிடையாதா என்ன? என்று. அவர் நாலு நாழிகை யோசித்துவிட்டு "பாஷ்யாந்த பண்டிதனை சப்தமஞ்சரியில் பரீக்ஷித்தால் என்ன பண்ணுவது? சப்தமஞ்ஜரி வாசித்து எத்தனை யுகமாயிற்று! என்றார்.

ஒரு நாள் ஒரு வித்வான் (வெள்ளிக்கிழமையன்று) ஸ்ரீ குணரத்ந கோசம் அநுஸந்திக்கிறார்; "ச்ரியச் ஸ்ரீ:ஸ்ரீரங்கேசய தவ ச ஹ்ருத்யாம் பகவதீம் ச்ரியம் த்வத்தோப்யுச்சைர் வயமிஹ பணும: ச்ர்ணுதராம்" என்கிற சுலோகத்தை யநுஸந்திக்கையில் "பணும?" என்கிற க்ரியா பதத்தை விஸர்க்கமில்லாமலும் சொல்லலாம்; விஸர்க்கமிருந்தால் லட்டில் உத்தமபஹுவசனமாகிறது; விஸர்க்கமில்லாமலிருந்தால் லோட்ரூபமாகிறது; [பணுநி பணுவ, பணும என்று ரூபம்] என்று அந்த பண்டிதர் சொன்னார் போலும்; அன்றைக்கு அவர் பட்டபாடு எழுபது வருஷமானாலும் வயிறு குலுங்கச் சிரிக்கச்செய்கிறது; ச்ர்ணு என்கிற க்ரியாபதத்தில் அந்த பண்டிதர் மருண்டிருக்கிறார்; ச்ருணு என்று ஸம்யுக்தாக்ஷரமாயிருந்தாலொழிய இங்கு பணும என்று லோட்ரூபம் பொருந்தாது என்று திருத்தகப்பனார் திருவுள்ளம். இற்றைக்கும்கூடப் பலபேர்கள் ச்ர்ணோதி, ச்ர்ணு என்று முதலெழுத்தை அஸம்யுக்தமாக க்ரஹியாமல் ச்ருணோதி, ச்ருணு என்று ஸம்யுக்தாக்ஷரமாகவே எண்ணியிருக்கிறார்கள். பணும என்றவிடத்தில் மகாரம் குர்வக்ஷரமாயிருந்தாலொழிய வ்ர்த்தத்திற்குப் பொருந்தாது. பணும: என்று விஸர்க்காந்தமாயிருந்தால் மகாரம் குர்வக்ஷரமாய்விடும்; அல்லது, மேலே ச்ரு என்று ஸம்யுக்தாக்ஷரமாயிருந்தால் பொருந்திவிடும். ஆகவே இங்கு பணும: என்று விஸர்க்காந்தமான லட்ரூபந்தான் பொருந்த வகையுண்டு; லோட்ரூபமாயிருக்க ப்ரஸக்தியே கிடையாது. ஏன்? ச்ரு என்று ஸம்யுக்தமல்லாமையினால். இதைத் திருத்தகப்பனார் அடியேன் வாயைக்கொண்டு அந்த பண்டிதர்க்கு விரித்துரைக்கச் செய்தருளினார். இற்றைக்கும் சில பண்டிதர்களுக்கு இவ்விஷயம் எளிதாகப்புரியாது. ச்ரு–ச்ரவணே என்று தாதுபாடமாகையாலே ச்ருணு என்றும், ச்ருணோதி என்றுமே [ஸம்யுக்தாக்ஷராதியாகவே] இருக்கப்ராப்தம் என்றே கொண்டிருக்கிறார்கள். இப்படிப்பட்ட மருள்கள் பண்டிதர்களுக்குப் பல விதம். இந்தவார்த்தையை எழுதும்போது திருத்தகப்பனாரை நினைத்

தால் அவர்க்கு மகனைப் பிறக்கப்பெற்றோமேயென்கிற ஸந்தோஷம் உள்ளடங்கமாட்டாதது.

"த்வம் புக்த்வா தத: பச்சாத் அஹம் போஜநம் கரோமி என்றாற்போன்ற அபத்தவாக்யங்களைக் கலந்து இரண்டொரு பக்கம் எழுதிக்கொடுத்து இது சரிதானா சொல்லு என்பர்; தப்புகளை எடுத்துச்சொல்லிவிட்டேனாகில் மிகமிகவுகந்து கொள்வர்; தப்புகளைத் தெரிந்துகொள்ளாமல் சரிதான் என்று சொன்னேனாகில் அன்று முழுதும் பல தத்துவங்களை உணர்த்தியருள்வர். அவர் ஜீவித்திருந்தது எனது பதினான்குவயதுவரையில். அதற்குள் நான் ஸுசப்தாபசப்தஜ்ஞாநத்தைப் பூர்த்தியாகப்பெற்றுவிட்டதாகச் சொல்ல முடியுமா? திருநாங்கூர் பிரதிவாதி பயங்கரம் பெரிய க்ருஷ்ணமாசாரிய ஸ்வாமி யென்பவர் இவ்வூரில் இரண்டு மூன்று வருஷம் அப்போது இருந்தார்; அவர் நல்ல நிருபகர், மற்றும் பல பலர். அவர்களின் உபகாரமும் பெரிது.

இக்காலத்தில் மதுராந்தகம் காலேஜில் வியாகரணப்ரொபஸராக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமதுபயவே பாதூர் ராகவாசார்ய ஸ்வாமியும் அடியேனுக்கு மஹோபகாரகர். ஏறக்குறைய இருபது வருஷங்களுக்கு முந்தினவொரு நிகழ்ச்சியை விஜ்ஞாபிக்கிறேன்; எம்பெருமானுருத்ஸவத்திற்கு ஸ்ரீபெரும்பூதூர் விடை கொண்டிருக்கிறேன். வேதபாராயண கோஷ்டியில் சென்றுகொண்டிருக்கிறேன். ஸ்ரீமத் பாதூர் ஸ்வாமியும் அவ்விடமெழுந்தருளியிருக்கிறார். ஸ்வாமியை முன் பின் அடியேன் அறியேன். வேதபாராயண கோஷ்டியின் பின்னால் எழுந்தருளி வந்து கோஷ்டி முடிந்தபின் தாமாக அடியேனிடம் அணுகி, "உசநா என்பது விஸர்க்காந்த பதமன்று" என்று ஸாதித்தார். அடியேனெழுதிய திருப்பாவை ஸம்ஸ்க்ருத வியாக்கியானத்தில் விஸர்க்காந்தமாக ப்ரமித்து ப்ரயோகித்திருந்தபடியால் திருத்திக்காட்டினார். அதன்பிறகுதான் அந்தஸ்வாமியின் வைதுஷ்யத்தையறிந்தேன். "நாண்பெரியோமல்லோம் நாம் நன்றும்தீதும்நமக்குரைப்பாருளரென்று நாடுவோமே" என்று ஸ்வாமி தேசிகனே அருளிச்செய்யும்போது நாம் எவ்வளவு?

இப்படிப்பட்ட பெரியார்களின் திருவருளால் பெரும்பாலும் ஸாரஸ்வதஸாரஜ்ஞனாயிருந்துவருகிறேனென்று கூசாமல் விஜ்ஞாபிக்

கத் துணிவுடையேன். ஜநிதர்மாக்களுக்கு ப்ரமப்ரமாதங்கள் அவர்ஜநீயம். கடைசியாக ஒரு விவக்ஷிதத்தை விஜ்ஞாபிக்கிறேன்.

## ஸ்ரீமதுபயவே மதுராந்தகம் வித்வான் வீரராகவாசார்யஸ்வாமி

தற்காலம் ஸ்ரீரங்கத்திலெழுந்தருளியிருக்கும் இந்த ஸ்வாமி அடியேனுக்கு *பால்யாத்ப்ரப்ருதி ஸஹஸ்நிக்த:. இடையிடையில் எமக்கு ஸாம்ப்ரதாயிக விவாதங்களும் நேரும். மதுராந்தக பண்டிதமஸ்தக பூஷா, மதுராந்தக ஸஹ்ருந்மணி சிரோபூஷா........முதலிய ஏழெட்டு க்ரந்தங்களை வடமொழியிலும் தென்மொழியிலும் அச்சிட்டு வெளியிட்டுமிருக்கிறேன். ஆயினும் ஸ்நேஹத்திற்கும் தத்பரீவாஹரூப பத்ரவ்யவஹாரங்களுக்கும் குறையிராது; நாலாறு மாதங்களுக்கு முன்பு அவர்க்கு ஒரு விண்ணப்பமெழுதினதில் "தேவரீரை ஸேவிக்கவேணுமென்கிற ஆசை மிகவுமுள்ளது என்றெழுதியிருந்தேன். அதற்கு அந்த ஸ்வாமிபதிலெழுதுகையில் "தாஸஸ்யாபி ஸ்ரீமதாம் ஸிஷேவிஷா பலீயஸீ வர்த்ததே" என்றெழுதியிருந்தார். அபசப்த ப்ரயோகம் யாரிடத்தில் கண்டாலும் கூசாமல் தெரிவிப்பது இயல்பாதலால், இவர் ஸிஸேவிஷா என்றெழுதாமல் ஸிஷேவிஷா என்று அபத்தமாக எழுதியிருந்தபடியால் அந்தத் தவறுதலை அவர்க்கு உணர்த்தி பதில் கடிதமெழுதினேன்;—"பக்ஷதையில் ஸிஷாதயிஷா என்று வாசித்த வழக்கத்தினால் ஸிஷேவிஷா என்கிற அபப்ரம்சம் நேர்ந்ததுபோலும்; இதில் அநுதாபமுண்டானால் மற்ற விஷயங்களிலும் அநுதாபங்கொள்ளுகிற ப்ராமாணிகரென்று ஸந்தோஷிப்பேன்; இதிலும் விவாதம் கொள்வதானால் இவர்வீண் வம்புக்காரர் என்று நிச்சயிப்பேன்—என்றுசரமாரியாக எழுதியிருந்தேன். ஆயினும்அவர் தமது பிடிவாதத்தைநாளைக்கும்விடவில்லை. கடைசியாக என்ன எழுதினேனென்றால், "ஸ்ரீமத் பரமஹம்ஸ அழகிய சிங்கரும் ஸ்ரீமதாண்டவனும் ஸ்வயம் வித்யாநிதிகள்; சிறந்த வித்வான்களையும் அருகே கொண்டிருக்கிறார்கள். அவர்களிடம் தேவரீர் இதை ப்ரஸ்தாவித்துத் தெளிவுபெற்றால் ப்ராமாணிக பண்டித கோஷ்டியில் பரிகணிதராவீர்; இது ஸம்ப்ரதாய விஷயமன்று; தென்கலையார் வடகலையார், ஸ்மார்த்தர் மாத்வர் என்னும் வாசியற அனைவரும் விமர்சிக்கக் கூடிய விஷயம். யாரேனுமொரு பண்டிதர் [தேவரீருடைய வித்யார்த்

திகளில் ஒருவராகவுமாம்] ஸிஷேவிஷா ஸரிதான் என்று எழுதிவிட்டால் அடியேன் இதுவரை தேவரீருக்கெழுதிய சிரோபூஷா மஸ்தகபூஷாதிகளை எப்படியாவது ஸ்ரீரங்கத்திற்கு வந்து திருவீதிகளில் கிழித்தெறிகிறேன்—என்று கடைசியாக எழுதியிருக்கிறேன். இது எழுதினது நேற்று கார்த்திகை மாத முடிவில் சென்னைக்குப் புறப்படுநாளில். சென்னையிலிருந்தும் ஒரு விண்ணப்பமெழுதியுள்ளேன் – இன்னமும் தேவரீருக்கு ஸிஷேவிஷாமருள் தொலையவில்லையா? என்று. திருத்தகப்பனருடைய திருவடி ஸேவையின் பெருமை என்னை இப்படி த்ருடப்ரதிஜ்ஞை செய்விக்கின்றது.

இப்போதே நினைவுக்கு வந்த தொன்றை [இதுவரை எழுதாததை] எழுதுகிறேன். அடியேன் ஸ்ரீராமாயண ஸங்க்ரஹம் வாசிக்கும்போது (பன்னிரண்டாவது வயதில்) அதில் ஆரண்ய காண்டத்தில் கரதூஷணதிவதப்ரகரணத்தில் *பர்த்தாரம் பரிஷஸ்வஜே* என்ற பரிஷ்வங்கத்தைச் சொல்லுகிற சுலோகம் *ஸமாச்லிஷத் ஸத்வரமாத்மவல்லபம்* என்பது. இங்கே நான் கேட்டேன்—ஆச்லிஷ்யதி என்பது லட்ரூபம். ஸமாச்லிஷ்யத் என்பது லங்ரூபமாகவேணும். லுங்ரூபம் வேறுவிதமாக இருக்கவேணும்; ஸமாச்லிஷத் என்பது என்ன லகாரம்?— என்று. இக்கேள்விக்கு ச் சிலர் பொருள்படுத்தவில்லை. ஒருவர் "கௌமுதியைப் பார்த்தேன்; ஆச்லிக்ஷத் என்று லுங்ரூபம் காண்கிறது. இங்கு அப்படிச்சொன்னால் வ்ருத்தபங்கமாகுமென்றார். முடிவு நினைவிற்கு வரவில்லை. மற்றொரு சிறு விஷயமுங் கேண்மின்; ரகுவம்ச பாடம் நடக்கிறது. அதில் நாலாவது ஸர்க்கத்தில் (2) *திலீபாநந்தரம் ராஜ்யே தம் நிசம்ய ப்ரதிஷ்டிதம், பூர்வம் ப்ரதூமிதோ ராஜ்ஞாம் ஹ்ருதயேக்நிரிவோத்தித:* என்கிற சுலோகத்தில் (நிசம்ய) என்பது எங்கே அந்வயிக்கிறது? என்று வினவினேன்; அக்நியில் அந்வயிக்கிறதென்றார்கள். மற்றொருவர் மற்றொன்று சொன்னார். [ஸாகரம் த்ருஷ்ட்வா மம ஆச்சர்யமஜநி] என்னலாமோ? என்றேன்; பின்னை எப்படியிருக்கவேணுமென்கிறாய் நீ? என்றார்கள்; [ஸாகரம் த்ருஷ்ட்வா அஹம் விஸ்மிதோபூவம்] என்றிருந்தால் பொருந்தும் என்றேன். ரகுவம்ச ப்ரயோகத்தைத் தவறென்கிறாயா? என்றாரொருவர். மற்றொருவர் "இது நீயாகக் கேட்கிற கேள்வியா? யாரேனும் கேட்கச்சொன்னார்களா? என்றார். வியாக்கியானத்தைப் பார்த்தால் தெரியவருமென்றார் சிலர். அப்போது ஒரு முடிவு ஏற்படவில்லை. இப்போது மதுராந்தகஸ்வாமியைக் கேட்டால் தெளிவு ஏற்பட்டுவிடும்.

## நிகமனம்.

ஸிம்ஷவிஷா ஸ்ரீஸூக்தி ஸமீபகாலத்தில் அவதரித்தது. "ததுபாய ப்ரார்த்தநா ஸூக்தி விவரண விஷயகமான விவாதம் பத்து வருடங்களுக்கு மேலாக நடைபெறுவது. இவ்விரண்டு விஷயங்களும் ஸம்ப்ரதாயார்த்த சர்ச்சையில் சேர்ந்தவையல்ல; வ்யுத்பத்தி பரீக்ஷணத்தில் சேர்ந்தது. வித்வான்களென்று பேர்படைத்தவர்களெல்லாரும் சிரிக்கக்கூடியது. இவ்விரண்டு விவாதத்தையும் அறவே விட்டிட்டோம். நம்முடைய ஸந்தோஷ சிந்தனைகளை யாராலும் தவிர்க்கமுடியாதன்றோ? இக்கட்டுரையின் மகுடத்தில் அதிமாத்ரஸங்கடத்தையும் எழுதியிருக்கிறோம். அதை விவரிக்க மனமில்லை. பத்தெட்டு வரிகளில் முடித்திடுகிறேன்.

அர்ச்சாவதார அநுபவத்தில் அடியேன் நிகரற்றவன். பத்தாவது பிராயம் முதல் எண்பத்தேழாவது பிராயம் வரையில் அவ்வநுபவம் அடியேனுக்குப்போல் மற்று எவர்க்கும் ப்ராப்தமானதில்லையென்று துணிந்து கூறுவேன். அதை இப்போது இழந்திருப்பது; ஸ்ரீயதோக்தகாரி யெம்பெருமான் ஸன்னிதியிலும், உலகளந்தபெருமாள் ஸன்னிதியிலும் இருபத்தைந்தாவது பிராயம் முதல் வேதபாராயணமில்லாமலும் அதில் அடியேனுடைய அந்வயமில்லாமலும் ஒரு உத்ஸவங்கூட நடந்ததுகிடையாது. அதையும் மூன்று வருஷமாக இழந்திருப்பது. நித்யம் ப்ரபாதத்தில் மாடவீதி வேதபாராயணகோஷ்டி நாற்பத்தொன்பது வருஷகாலம் அவிச்சிந்நமாக நடத்தினது — ஸஹாத்யாயிகளின் வியோகத்தினால் அதையும் இழந்து கிடப்பது. இவை முதலான மனக்கிலேசங்கள் பரிஹாரமற்றவையென்று நினைக்கத்தக்கவை. திருமலையிலும் திருவீதிகளிலும் பேரருளாளனுடைய ஸேவையை இழந்திருப்பது மேலான ஸங்கடம். பகவத் பாகவத க்ருபாதிசயத்தினால் *தழைநல்ல வின்பம்தலைப்பெய்து எங்கும் தழைக்கவே. குறைமுட்டுப் பரிவிடர் துயர் துன்பமல்லல் துக்கம் தளர்வுகேடுகளின்றி வாழ்வோமாக.

— நித்ய ஸ்ரீர் நித்ய மங்களம். —

**P. B. அண்ணங்கராசாரிய ஸ்வாமிகளின் நூல் துறைகள்**

1 நாலாயிர திவ்யபிரபந்த வுரைகள்
2 பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
3 ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
4 ஆழ்வாராசார்யப்பிரபாவ நூல்கள்
5 இதிஹாஸ புராண சரித்திர ,,
6 ரஹஸ்யார்த்த விளக்க ,,
7 வேதாந்தப் பொருள் விளக்க ,,
8 ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9 வேதவிசாரலக்ஷண நூல்கள்
10 லோகாபிராம உபந்யாஸ ,,
11 பரபக்ஷப்ரதிக்ஷேப ,,
12 உபந்யாஸக ஸௌபாக்ய ,,
13 வடமொழி நூல் திரள்கள்
14 ஹிந்தீ பாஷையில் நூல்கள்
15 தெலுங்கு பாஷையில் ,,
16 பூர்வாசா ய க்ரந்த வெளியீடுகள்;

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க.

ந்தாபணம் M. O. செய்பவர்கள்:-

**P. B. ANNANGARACHARYA,**
Editor, Granthamala, Kanchipuram-631503.
என்ற விலாசத்திற்கு அனுப்புக:



If un-delivered please return to:
**P. B. ANNANGARACHARYA,**
Kanchipuram, Pin Code-631503,


*Edited and Published by P. B. Annangaracharya Swami, and Printed by E. Devarajan at Sri Kamakshi Press, No. 44-C, T. K. Nambi St., Kanchipuram 631503.*